Registered No. M. 2330.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு"

| மலர் சு | ஸ்ரீமுக ஆண்டு ஆடித் திங்கள் 1933 ஜூலை | இதழ் எ |
| --- | --- | --- |

## செந்தமிழ்ப் புரவலர் வாழி

[பத்திராசிரியர்]

ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் அறுபதாம் ஆண்டு நிறை விழாவில் சைவத் திருவாளர் - த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் செந்தமிழ்ப் புரவலர் என்ற பட்டம்பெற்ற செய்தியை அளவு கடந்த மகிழ்ச்சி யோடு தெரிவிக்கின்றோம். தமிழ் இரவலர் மிகுந்தும் புரவலர் உண்டோ இல்லையோ என்று அருகியும் வரும் இந்நாளில் கரந்தையில் ஓர் தமிழ்ச் சங்கம் நிறுவி அதை மிகச் செவ்வனே பல்லாண்டுகள் நடத்தி வருவதோடு அமையாது, கட்டுரைப் பூக்கள் நிரம்பிய 'தமிழ்ப்பொழில்' என்ற பத்திரிகையையும் திறம்பட நடத்துவது தமிழ் புரக்கும் வள்ளல் செயலன்றி சாமானியர் செயலாகாது. திருவாளர் பிள்ளையவர்கள் எளிய வாழ்க்கையும் சீரிய நினைப்பும் உடைய பெரியார் (Plain living and high thinking). வழக்கறிஞர் துறையிலும் சிலகாலம் அரசியற்றுறையிலும் தமது கடமையைச் செலுத்தும் காலம் போக ஒழிந்த வேளைகளிலெல் லாம் தமிழுக்கும் சிறப்பாக சைவத்துக்கும் ஒல்லும் வகையெல்லாம் ஓவாதே அறம்புரியும் பெற்றி யுடையார். துறையூரிலும் சிராப்பள்ளியிலும் நடந்த தமிழ்ப் புலவர் மகாநாடுகட்குப் பிள்ளையவர்களே ஆன்மாவாக விளங்கினர் கள். திருவையாற்று நாட்டுமொழிக் கல்லூரியில் தமிழுக்காகப் பிள்ளையவர் கள் தேடிவைத்த ஆக்கம் மலையனைத்து. பிள்ளையவர்கள் உதவியின்றேல் தமி ழுக்கு அக்கல்லூரியில் இடமே கிடைத்திராது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பிள்ளையவர்கள் தமிழை வளர்க்க செய்துவரும் முயற்சிகள் பல.

அவை தமிழ்த் தெய்வத்தின் திருவருளால் விரைவில் ஈடேறுமென்று எண்ணுகிறோம்.

திரு. பிள்ளையவர்கள் நமது சமாஜ உதவித் தலைவருள் ஒருவர். இவ்வாண்டில் சமாஜ விழாவைத் தஞ்சையில் நடத்தும் பொறுப்பை ஏற்றுள்ள சீலர். நமது பத்திரிகைக்கும் திருமுறை வெளியீடுகட்கும் பேருதவி புரியும் ஒரு சிலருள் தலைமை வகிப்பவர். எமது உயிரினுமினிய ஒப்பற்ற நண்பர். இத்தகைய பெரியாருக்குத் தமிழ்நாட்டுப் புலவரெலாம் திரண்டு வந்த பேரவையில் செந்தமிழ்ப் புரவலர் என்ற பட்டம் அளிக்கப்பட்டது சாலப் பொருத்தமே. பிள்ளையவர்கள் செந்தமிழ் புரக்கும் செந்தொழிலையே ஆயுட்பணியாக மேற்கொண்டு நடத்துமாறு செவ்வேள் அருள் புரிக. செந்தமிழ்ப் புரவலர் வாழி, வாழி, நீடூழி வாழி.

## பதினாயிரம் வழங்கிய பக்த சிரோமணி

[காரியதரிசி]

ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் தமது அறுபதாம் ஆண்டு நிறைவிழாவில் சைவத் தமிழ்க் கல்லூரி ஒன்றைத் தாபிக்க பதினாயிரம் ரூபா மூலதனமாக வழங்கிய வள்ளன்மையை மிக மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறோம். "கிளை பொருளில்லான் கொடையே கொடைப் பயன்" என்றார் நீதி நூலார். பொருள் வருவாய் சுருக்கமாகவுள்ள ஒரு மடத்தின் தலைவர் பதினாயிரம் கொடுப்பது, லக்ஷக்கணக்கில் தின்று கொழுக்கும் மடாதிபதிகளின் கொடைகளைவிடப் பதினாயிரம் மடங்கு சிறந்தது. நற்செயல்கட்கு இம்மியளவும் பிதிரவிடாது மனமிறுகி விளங்கும் மடாதிபதிகளை நமது சுவாமிகளைவிட உயர்ந்தவராகத் தமிழ்நாடு ஒருபோதும் கருதாது. ஈகை என்பது பிறவிக் குணம்.

சுவாமிகள் நமது பத்திரிகையின் ஒரு மாதத்திய செலவை நன்கொடையாக அளித்ததை நன்றியுடன் ஏற்கின்றோம். 'சிவநேசன்,' 'லோகோபகாரி,' 'செந்தமிழ்ச்செல்வி' என்ற பத்திரிகைகள் ஒவ்வொன்றற்கு இருபத்தைந்து ரூபா நன்கொடை யளித்த செய்தியையும் மிக மகிழ்வுடன் தெரிவிக்கின்றோம். கரந்தைத் தமிழ்ச் சங்கத்துக்குச் சுவாமிகள் நூறு ரூபா நன்கொடை யளித்ததும் மகிழ்ச்சியைத் தருகிறது. பதினாயிரம் வழங்கிய பக்த சிரோமணி நீடூழி வாழி வாழி வாழி.

# சொற்பொழிவுக்கென தருமசாசனம்

## ரூபாய் 1000 பெறுமான ஸ்திர ஆஸ்தியின் Trust Deed

1933-ம் வருஷம் மேமாதம் 15-ம் தேதி (பதினைந்தாம் தேதி) வட ஆற்காடு ஜில்லா வாலாஜா தாலுகா வாலாஜாபேட்டை சுவர்ணசெட்டி வீதியிலிருக்கும் வீரசைவ ஜாதி வர்த்தக ஜீவனம் கானுகூர்த்தி சங்களப்ப செட்டியார் குமாரர் சுமார் 54 வயதுள்ள மல்லப்ப செட்டியார் அடியிற் கண்டபடி அமைக்கப்படும் ஷை ஊர் ஸ்ரீ ஏகாம்பரநாத ஸ்வாமி பிரமோற்சவப் பிரசங்க தர்ம பரிபாலன கமிட்டியாருக்கு எழுதிக் கொடுத்த சாசுவத தர்மசாசனம் (Irrevocable Deed of Trust) என்னவென்றால்: இவ்வூரில் உள்ள ஸ்ரீ ஏகாம்பரநாத ஸ்வாமி சிவாலயத்தில் பங்குனி மாதத்தில் நடக்கும் பிரமோற்சவத்தை யொட்டி ஐந்து நாட்களுக்குக் குறையாமல் சமயப் பிரசாரமும் தமிழ் வளர்ச்சியும் செய்வதற்கு ஓர் ஏற்பாடு செய்யவேண்டுமென்ற எண்ணம் வாலாஜாநகர் திருக்குறள் கழகத்தில் சேர்ந்து திருக்குறளைச் சிரவணித்து வந்ததின் பயனாக எனக்குச் சிலகாலம் உண்டு. அதற்காகக் கீழ்வரும் ஏற்பாடுகளைக் கீழே காணும் முறைப்படி இந்த சாஸனத்தின் மூலம் நாளைய தேதியில் செய்திருக்கிறேன். தர்மத்தின் நோக்கம் (Object of the Trust.)

1. ஷை ஸ்ரீ ஏகாம்பரநாத ஸ்வாமி கோயில் திருவிழாக்காலத்தில் ஷை வாலாஜாபேட்டையில் தகுந்த ஒரு இடத்தில் வாலாஜாபேட்டை வாசிகள் பயன் பெறுவதற்காகவும் ஷை திருவிழாவிற்கு வரும் இதர ஜனங்களின் உபயோகத்திற்காகவும், வீரசைவம், சைவ சித்தாந்தம் என்ற உட்பிரிவுகளோடுங்கூடிய சைவசமய உண்மைகளையும் தமிழ்ச்சிறப்பையும் எளிய மக்களும் அறியக்கூடிய வகையில் சொற்பொழிவுகள் மூலம் பரப்புவது இந்த சாஸனத்தில் காணும் முக்கிய நோக்கமாகும்.

2. இந்த நோக்கத்தை பூர்த்தி செய்வதற்கு இந்த சாஸனத்தின்படி அமைக்கப்பட்ட தர்மகர்த்தர்கள் தமிழ் நாட்டில் உள்ள தகுந்த சைவப் பேரறிஞர்களையும் தமிழ்ப் புலவர்களையும் தருவித்து சொற்பொழிவுகள் நிகழ்த்தல்.

3. பொருள் இடந்தருமாயின் ஷை சொற்பொழிவுகளோடு கூட துண்டுப் பிரசுரங்கள் பத்திரிகைகள் ஆகியவற்றின் மூலம் ஷை சைவசமய உண்மைகளையும் தமிழ் மாண்பையும் பரப்புதல்.

## Execution of the Trust தர்ம பரிபாலகர்கள்

மேற்கூறிய நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக 7 (ஏழு) தர்மகர்த்தர்கள் தேர்ந்து எடுக்கப்படவேண்டும்.

1. இந்த தர்மத்தை ஏற்பாடு செய்கிற நான் என் ஆயுள் வரையில் தர்மகர்த்தர்கள் கமிட்டியில் ஒருவனாக இருக்கவேண்டும். எனக்குப் பிறகு எனக்குப் பதிலாக நான் உயில் மூலமாகவோ அல்லது வேறு வழி

யிலோ நியமிக்கிற எனது வீரசைவ வகுப்பைச் சார்ந்த ஒருவர் தமது ஆயுள் வரையில் தர்மகர்த்தர்கள் கமிட்டியில் ஒருவராக இருந்து வரவேண்டியது. இவருக்குப் பிற்காலம் கூடியவரையில் என்னுடைய குடும்பத்தைச் சேர்ந்தவராகவும் அதில் தக்கவர் கிடைக்காவிட்டால் என்னுடைய வகுப்பில் ஒருவரை இவர் நியமிக்க வேண்டியது. இவ்வாறு தர்மகர்த்தர்கள் கமிட்டியில் ஒருவர் நியமிக்கப்பட்டு வரவேண்டியது.

ஏதாவது ஒரு காரணத்தால் நானாவது அல்லது என்னால் நியமிக்கப்படுபவராவது அவருக்குப் பின் அம்முறையில் நியமிக்கப்பட்டு வரும் ஒருவராவது இம்முறைப்படி தமக்குப் பிற்காலத்திற்கு ஒருவரை நியமிக்கத் தவறிவிட்டால் அந்த ஸ்தானத்திற்கு ஷை தர்மகர்த்தர்கள் கமிட்டியைச் சேர்ந்த மற்றவர்கள் ஒன்றுகூடி கூடியவரையில் என்னுடைய குடும்பத்தைச் சேர்ந்தவராகவும் இல்லாவிடில் என்னுடைய வகுப்பைச் சார்ந்தவராகவுமுள்ள தகுந்த ஒருவரை அவர் ஆயுள் வரை நியமிக்க வேண்டியது.

2-(a) தர்மகர்த்தர்கள் கமிட்டியில் இதர அங்கத்தினர்கள் :—இந்த வாலாஜாபேட்டை முனிசிபாலிடியில் அவ்வப்போது தேர்ந்து எடுக்கப்படும் தலைவர் (சேர்மன்) ஹிந்துவாக விருந்து இந்த தர்ம பரிபாலனத்தில் கலந்து கொள்ள விருப்பமுடையவராய் இருந்தால் அவர் தலைவர் பதவியிலுள்ள வரையில் இந்த தர்மகர்த்தர்கள் கமிட்டியில் ஒருவராக இருக்கவேண்டியது. அவர் ஹிந்துவாக இல்லாது போனாலாவது அல்லது அவருக்கு இந்த தர்ம பரிபாலனத்தில் கலந்து கொள்ள விருப்பமில்லாது போனாலாவது ஷை தர்மகர்த்தர்கள் கமிட்டியின் இதர அங்கத்தவர்கள் தகுந்த வேறு ஒரு ஹிந்து முனிசிபல் கவுன்சிலரைக் கமிட்டியில் ஓர் அங்கத்தினராக வரித்துக் கொள்ளவேண்டியது. (Co-opt) அவர் ஷை தர்மத்தில் கலந்துகொள்ள விருப்பமுடைய தகுந்த ஹிந்து சேர்மன் கிடைக்கும் வரையில் ஷை கமிட்டியில் அங்கத்தவராக இருக்கலாம். பிறகு சேர்மன் அந்த ஸ்தானத்திற்கு உரியவராவர்.

(b) சைவசித்தாந்த மகாசமாஜத்தின் நிர்வாகசபையால் இரண்டு வருஷத்திற்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவர் ஷை கமிட்டியில் ஒரு அங்கத்தவராக இருக்கவேண்டியது. இரண்டு வருஷத்திற்குள் ஷை ஸ்தானம் காலியானால் ஷை ஸமாஜத்தின் நிர்வாக சபையே வேறு ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டியது.

(c) மிகுதியாயுள்ள நான்கு ஸ்தானங்களுக்கு இந்த தர்ம சாஸனத்தின் மூலம் கீழ்க் கண்டவர்களை நான் நியமித்திருக்கிறேன். (1) திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளை, B. A., L. T. (2) திருவாளர் உப்பிலி சங்கப்பா. (3) மறைத்திருவாளர் W. தியாகராஜ ஐயர் (4) திருவாளர் W. K. ஜானகிராம முதலியார். இவர்கள் வருஷத்திற்கு ஒருவராகத் தங்கள் ஸ்தானத்திலிருந்து திருவுளச் சீட்டின்படி சீட்டுக் குலுக்கி யெடுக்கும் பேருடைய மெம்பர் விலகிக் கொள்ளவேண்டும். இந்நான்கு வருஷத்திற்குப் பிறகு ஐந்தாவது வருஷ முடிவில் முதல் வருஷக் கடைசியில் காலியான ஸ்தானத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவரும் ஆறும் வருஷ முடிவில் இரண்டாவதாக காலியான ஸ்தானத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வரும்

மற்ற மூன்று நான்காவதாக காலியான ஸ்தானங்களுக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் முறையே ஏழு எட்டாமாண்டு முடிவில் தம்தம் ஸ்தானங்களி னின்று விலகிக் கொள்ளவேண்டும் இம்முறையிலேயே பிற்காலத்திய தேர் தல்கள் நடத்தல் வேண்டும்.

காலியாகும் ஸ்தானத்திற்கு மற்ற அங்கத்தினர்கள் தகுந்த ஓர் ஹிந்துவைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டியது.

ஒருமுறை அங்கத்தினராக விருந்தவர்கள் மீண்டும் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்படலாம். எக்காரணத்தினுலோ மேற்கூறிய ஸ்தானங்களுக்கு அங்கத்தினர்கள் மேற்கூறிய வகையில் தேர்ந்தெடுக்கப்படாவிட்டால் தகுந்த படி அறிக்கை செய்து அதன் பிறகு ஷை தர்மகர்த்தர்கள் கமிட்டியில் இதர அங்கத்தினர்கள் ஒன்று கூடி அந்தக் காலிஸ்தானங்களுக்குத் தக்க ஹிந்து அங்கத்தினர்களை வரித்துக்கொள்ள வேண்டியது (co - opt). மேற்கண்ட படி அமைக்கப்பட்ட கமிட்டியின் நடவடிக்கைகளில் மெம்பர்களுக்குள் அபிப்பிராய பேதம் ஏற்படுமானல் மீடிங்கில் ஆஜராயிருக்கும் மெம்பர்களில் மெஜாரிடி மெம்பர்களின் அபிப்பிராயப்படி நடக்க வேண்டியது. சமவோட் டுகளாக விருந்தால் தலைவருக்கு இரண்டு வோட்டுகள் உண்டு. (Casting vote) Quorum :—இந்தக் கமிட்டியின் ஒவ்வொரு மீடிங்கிற்கும் குறைந் தது நான்கு பேர்களாவது ஆஜராயிருந்து நடத்த வேண்டியது. Duties of the Trustees :—மேற்கண்டபடி அமைக்கப்பட்ட தர்மகர்த்தர்கள் கமிட்டி அங்கத்தினர்கள் இந்த சாசனத்தில் கண்டுள்ள சொத்துக்களை சட்டமுறைப் படி பரிபாலனம் செய்து அவைகளிலிருந்து வரக்கூடிய நிகர வருமானத்தை மேற்கூறிய தர்மத்தின் நோக்கங்கள் முற்றுப் பெறுவதற்காக உபயோகப் படுத்த வேண்டியது. அதாவது சொற்பொழிவுகள் செவ்வையாய் நடை பெறுவதற்கான இடம் முதலிய சகல ஏற்பாடுகளும், சொற்பொழிவாளர் களைத் தருவித்து உபசரித்து அனுப்புவதற்கான செலவுகளும் செய்யவேண்டி யது. இவை போக, பொருள் வருமானத்தில் மிகுதி யிருந்தால் துண்டுப் பிரசுரங்கள் வழங்கல், படக்காக்ஷி காட்டல் முதலிய வழிகளில் சைவ சமயப் பிரசாரம் செய்ய வேண்டியது. எக்காரணத்தினுலாவது ஸ்ரீ ஏகாம்பரநாத ஸ்வாமி கோயில் பிரமோத்ஸவம் நடைபெறுது போனுலும் இந்த ஸாஸனத் தில் குறித்த சமயப் பிரசாரம் சொற்பொழிவுகள் ஷை பிரமோத்ஸவ கால மாகிய மாதத்தில் மேற்கண்டபடி ஷை கமிட்டியார் நடத்தி வரவேண்டியது. ஷை தர்மகர்த்தர்கள் கமிட்டியில் நான் உள்ளவரையில் தலைவராக (President) விருந்து ஷை தர்மபரிபாலனத்தை ஷை கமிட்டியின் அபிப்பிராயப் படி நடத்திவருவே னுகவும். நான் தலைவர் ஸ்தானத்தை விட்டுவிட்டாலும் எனக்குப் பின்னும் ஷை கமிட்டியினர் தங்களுள் ஒருவரை இரண்டு வரு ஷத்திற்கு ஒரு முறை தலைவராகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டியது. இந்த தர்ம சாஸனத்தை மனப்பூர்வமாக நான் எழுதி இந்த தருமத்தை வாலாஜா நகர்வாசிகளும் திருவிழாக் காணவரும் இதர ஹிந்துக்களுமாகிய இவர்களின் பொது நன்மைக்காக ஏற்படுத்தி யிருக்கிறேன். இந்த தர்மம் எக்காரணத்தினுலாவது சரியாக நடைபெறுவிட்டால் ஷை பொது நன்மைக்

குரியவர்கள் சட்ட முறைப்படி நடவடிக்கைகள் நடத்தி ஷ டி தர்மங்களை சரியாய் நடத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய உரிமை யுடைய வர்கள்.

இந்த தரும சொத்தில் யாதொரு கலனும் இல்லை. அப்படிக் கிருந்தால் என து சொந்தச் செலவில் கலன்களைத் தீர்த்துக் கொடுக்கக் கடவேன். இந்த சாஸனத்தில் கண்ட சொத்தைக்கொண்டு திட்டமாய் அதிக நிரந்தர வரும்படி வரக்கூடிய வேறு ஸ்தாவர சொத்தை வாங்கக் கூடுமானால் என்னுடைய ஜீவதசைக்குள் ஷ டி தர்மகர்த்தர்கள் கமிட்டியின் சம்மதத்தின்பேரில் மாற்றி வைக்கிறதற்கு எனக்கு உரிமை உண்டு. என் ஜீவதசைக்குப் பிறகு மேற்கண்டவாறு மாற்றுவதற்கு கோர்ட்டுமூலம் உத்தரவு பெற்றுதான் செய்யவேண்டும். மேற்கண்டவாறு தவிர மற்ற வகையில் இந்த தரும சாஸனத்தை மாற்றவாவது ரத்து செய்யவாவது எனக்காவது என்னுடைய பின் வர்களுக்காவது யாதொரு அதிகாரமும் கிடையாது.

கீழ்க்கண்ட சொத்தை மேற்கண்ட தருமத்தின் தற்காலிக டிரஸ்டிகளாகிய 1. திருவாளர் - K. S. மல்லப்ப செட்டியார். 2. திருவாளர் - வாலாஜா பேட்டை முனிசிபல் சேர்மன் W. V. வீரராகவ முதலியார். 3. திருவாளர் - சைவ சித்தாந்த மஹா சமாஜத்தால் தேர்ந்தெடுத் தனுப்பப் படும் ஒருவர். 4. திருவாளர் - S. சச்சிதானந்தம் பிள்ளை, B. A., L. T. 5. திருவாளர் - உப்பிலி சங்கப்பா. 6. மறைத் திருவாளர் - W. தியாக ராஜ ஐயர். 7. திருவாளர் - W. K. ஜானகிராம முதலியார் ஆகிய இவர்களுக்கு இதன் மூலமாக ஸ்வாதீனம் செய்துவிட்டேன். இந்தப்படிக்கு என் மனப்பூர்வமாய் நான் சம்மதித்து எழுதிக் கொடுத்த சாசுவத தர்மசாஸனம்.

சொத்து விவரம் :—வட ஆர்க்காடு டிஸ்டிரிக்ட் வாலாஜா பேட்டை சப் டிஸ்டிரிக்டைச் சேர்ந்த வாலாஜா டவுன் ஒன்றுவது வார்டு டிரங்கு ரோட் வீதி, தென்னண்டை வாடையில் கசாப்சாமராவ் பாக வீட்டிற்குக் கிழக்கு, போஸ்டாபீஸ் வைத்திருக்கும் பாபு செட்டியார் வீட்டிற்கு மேற்கு, வீதிக்குத் தெற்கு, முனிசிபல் கக்கூஸ் சந்துக்கு வடக்கு, இதன் மத்தியில் மேலண்டை சுவர் உள்பட கிழக்கு மேற்கு கஜம் 20½ தென்னண்டை சுவர் உள்பட வடக்கு தெற்கு கஜம் 57 இதில் தட்டோட்டினால் கட்டிய கட்டுகோப்புமேல் சாமான் அடிநிவேசனமும் புழக்கடையும் பலவிருக்ஷங்களும் உள்பட முனிசிபாலிடி 41/169, 42/160 நெம்பர்கள் உள்ள விடுகள் இரண்டும் ஷ டி நெம்பர் 41/169 வீட்டின் புழக்கடையிலிருக்கும் கிணறும் ஷ டி வீடுகளில் இருக்கும் ஜன்னல் அலமாரிகள் வகையறு கட்டட சாமான்களும் சேர்ந்தது. ஷ டி வீடுகளுக்கு சக்பந்தி :—41/169 வீட்டிற்கு, டிரங்கு ரோட்டிற்கு த்தெற்கு, போஸ்டாபீஸ் வைத்திருக்கும் பாபுசெட்டியார் வீட்டிற்கு மேற்கு ஷ டி தருமத்தின் தற்காலிக டிரஸ்டிகளுக்கு ஸ்வாதீனம் செய்திருக்கும் 42/160 நெ வீட்டிற்குக் கிழக்கு, முனிசிபல் சந்துக்கு வடக்கு கி+மே கஜம் 10¼; வடக்கு தெற்கு கஜம் 57. கிணறு ஒன்றும். 42/160 வீட்டிற்கு சக்பந்தி :—டிரங்கு ரோட்டுக்குத் தெற்கு, கசாப் சாமராவ் பாகவதர் வீட்டிற்குக் கிழக்கு, ஷ டி

தருமத்தின் தற்காலிக டிரஸ்டிகளுக்கு ஸ்வாதீனம் செய்திருக்கும் 41/169 நெ. வீட்டிற்கு மேற்கு, முனிசிபல் சந்துக்கு வடக்கு. கி+மே கஜம் 16¼; வ+தெ கஜம் 57.

சாக்ஷிகள்

(Sd.) V. VEERARAGHAVAN,
*Chairman, Municipal Council, Walaja.*
,, W. TIYAGAROYA IYER.          காருகூர்த்தி மல்லப்ப செட்டி.
,, உஜ்ஜினி சங்கப்பா.
,, கொ. இராமலிங்காச்சாரி.

குறிப்பு :—இந்தப் பத்திரம் வாலாஜா நகர் சப்ரிஜிஸ்திரார் ஆபீஸ் 1933ஙூ-த்திய 908-வது தஸ்தாவேஜாக ரிஜிஸ்தர் செய்யப்பட்டுள்ளது. இந்தப் பத்திரத்தின்படி சமாஜப் பிரதிநிதியாக வாலாஜா நகர் முனிசிபல் ஹைஸ்கூலில் தமிழ்ப் பண்டிதராகவுள்ள திரு - கோ. இராமலிங்காசாரியார் அவர்களை 15-6-33-ல் நடந்த சமாஜ நிர்வாக சபைக்கூட்டம் தேர்ந்தெடுத்தது. இந்தக் கொடையைப்போல வேறுபல சிலர்கள் கொடையளிக்க முன்வருவார்களாக. [பத்திராசிரியர்.]

## "வந்தவா றெங்ஙனே போமாறேதோ"*

[தூத்துக்குடி திரு. ந. சிவகுருநாதபிள்ளை அவர்கள்]

இச் சொற்றொடர் அப்பர் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய "தந்தையார் தாயாருடன் பிறந்தார்" என்ற தொடக்கத்த திருத்தாண்டகச் செய்யுளில் வருகிறது. அடிகள் அச்செய்யுளில் தந்தை தாய் முதலியவர்கள் பற்றை விடவேண்டுமென்று குறிப்பாகச் சொல்லியிருக்கிறார். அவர்கள் மேலுள்ள பற்றை நாம் ஏன் விடவேண்டும்? அவர்கள் நமக்கு நன்மை செய்யும்பொழுது அவர்கள்பால் நாம் ஏன் பற்று அற்றிருத்தல்வேண்டும்? ஆளுடைய அரசு அந்த எண்ணம் கொண்டவரல்ல. அந்தப் பற்றிலேயே மூழ்காது மற்ற ஒரு முக்கியமான பற்றை நாம் மறக்காமல் இருக்கவேண்டும் என்பதே அவர் நோக்கமாகும்.

மனிதப் பிறப்பு மிகவும் அரிதானது. "அரிது அரிது மானிடராதல் அரிது" என்றனர் நம் அருந்தமிழ் மூதாட்டி. தாயுமானாரும் "எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிது அரிது காண்" என்றருளினர். அத்தகைய பிறவியின் குறிக்கோள் என்ன என்பதை,

"மானிடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயத்
தானிடத் தைந்து மாடும்அரன் பணிக்காக வன்றோ

---

*இது சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் 24-2-33ல் தூத்துக்குடி திரு. ந. சிவகுருநாதபிள்ளை அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம். என் கைக்குறிப்புகளைக் கொண்டு எழுதினேன்—G. கலியாணம், B. A., Dip, Ec.

வானிடத் தவரும்மண் மேல்வந் தான்ற னையர்ச்சிப்பர்
ஊனெடுத் துழலும் ஊமர்ஒன் றையும் உணரார்அந்தோ"

என்ற சித்தியார் செய்யுள் வலியுறுத்துகிறது. உலகத்தில் நமக்குச் சார்பாக இருப்பவர்களிடம் மாத்திரம் நாம் பற்று வைத்திருந்தால் பயனில்லை. அவர்கள் வந்தவா றெங்ஙனே, போமாறேதோ. யாக்கை நிலையானதல்ல. "நேற்றிருந்தார் இன்று வெந்து நீறானார்," "முடிசார்ந்த மன்னரும் மற்று முள்ளோரும் முடிவிலொரு பிடிசாம்பராவர்," "நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும் பெருமை யுடைத்திவ்வுலகு" என்பன இதை வற்புறுத்தும். ஆகையால் நாம் உலகத்தில் நமக்கு உதவியாக இருப்பவர்களை மாத்திரம் சதம் என்று நினையாமல், நமக்கு உயிர், தாய் தந்தை முதலியவர்களை அளித்த ஒருவனை எண்ணவேண்டும். அவன் தாய் தந்தையரினும் நமக்கு இனியன்; நம்மினும் நமக்கு இனியன். இதையே வாக்கின் வேந்தர்,

"என்னில்யாரு மெனக் கினியா ரில்லை
என்னிலும் இனியா னொருவன் உளன்
என்னுளே உயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னுளே நிற்கும் இன்னம்ப ரீசனே"

என்று திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றனர். "தந்தை தாய் தமர்தாரம் மகவெனும் இவையெலாம் சந்தையிற் கூட்டம் இதிலோ சந்தேகமில்லை" என்று கூறியிருக்கின்றனர் தாயுமானாரும். ஆனால், கடவுளோ நம்மை எப்போதும் விடாது தோன்றாத் துணையா யிருக்கிறார். ஒரு தங்கக் கிண்ணத்தை வைத்திருக்கும் குழந்தை பின்னால் அதன் தாய் தந்தையர் போவதுபோல் ஈசன் நம்முடனே இடைவிடாது சுற்றுகின்றான். இறைவன் நமக்குக் கைம்மாறற்ற கருணை செய்கிறான்; அவன் அறிவாகிய அம்பலத்தில் சதா ஆனந்த நடனம் செய்கிறான்; அதுவும் இடைவிடாது செய்கிறான். அதற்கு நம் கடமை நன்றி மறவாமையே. அதாவது நாம் உயிர்க்குறுதி பயப்பனவாகிய செய்கைகளையே செய்தல்வேண்டும். மேலே கூறியுள்ள "மானுடப்பிறவி தானும் வகுத்தது" என்ற தொடக்கத்த சித்தியார் செய்யுள் ஈண்டு கவனிக்கத்தக்கது. உலக சிருட்டி 5000 ஆண்டுகளுக்கு முன் என்று சொல்லப்பட்டாலும் இறைவன் அநாதியாய், அநாதியாகிய உயிர்களிடத்து அதற்கு முன் கருணைகாட்டவில்லை என்பது அவன் கருணைக்கு இழுக்காகும். "நம்மை இறைவன் ஏன் அழித்தல் வேண்டும்? அது அவன் பெருங் கருணைக்கு அழகாகுமா?" என்ற கேள்விகள் எழலாம். ஆண்டவன் அழித்தல் செய்யாவிடில் உலகில் ஜீவராசிகள் அளவிற்கு மிஞ்சி உண்டாகி, உணவு, இடம் முதலியவற்றிற்குத் துன்பப்பட வேண்டுமன்றோ? அவனுடைய அழித்தற்றொழில் ஜீவராசிகளிடத்து அவனுடைய ஒப்பற்ற கருணையையன்றோ காட்டுகின்றது. அழித்தல் இளைப்பாற்றலேயன்றி வேறன்று. சித்தியாரில்,

"அழிப்பிளைப்பாற்ற லாக்க மவ்வவர் கன்மமெல்லாங்
கழித்திடலாகச் செய்தல் காப்பது கன்மவொப்பிற்

றெழித்திடன் மலங்களெல்லா மறைப்பருள் செய்திதாலும்
பழிப்பொழிபந்தம் வீடு பார்த்திடி னருளே யெல்லாம்''

என்று கூறியிருப்பதை நோக்குமின். மணிவாசகப் பெருந்தகையும் ''எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்'' என்று அருளியிருக்கின்றார். திருட்டிதியால் ஆணவமலம் பரிபாகம் அடைகிறது; சங்காரத்தால் கன்மமலம் பரிபாகம் அடைகிறது.

நாம் எங்கிருந்து, எப்படி உலகத்திற்கு வந்தோம்; மறுபடியும் எங்கே போய்ச் சேருகிறோம் என்பவைகளைப்பற்றி யான் சொல்லப் புகுகின்றேன். ''தூலமா முருவினுக்குச் சூக்குமம் முதல்'' இது உலக இயற்கை. நம் சரீரம் தூலம். அளவை முறைப்படி பார்த்தாலும் அது சூக்குமமான ஒரு பொருளினின்றும் தான் வரவேண்டும். பல தூல சரீரங்களுக்கெல்லாம் ஒரு சூக்கும சரீரம் தான் காரணம். நிலம், நீர், தீ, வளி, வான் ஆகிய இவைகள் சேர்ந்ததுதான் உடல் என்ற போதிலும், இந்த பஞ்ச பூதங்களைக் கொண்டு சரீரத்தைச் செய்ய முடியாது. பஞ்ச தன் மாத்திரைகளான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் இவைகளினின்றே பஞ்ச பூதங்கள் உண்டாயின. ஒரு சூக்கும சரீரத்திலிருந்து ஒரு வகைப் பிறப்புத் தானே உண்டாக முடியும் என்ற ஐயம் எற்படலாம். பலவேறு வகைப்பட்ட பிறப்புகள் ஒரு சூக்கும சரீரத்தினின்றும் ஆக்கப்படுவது ஆக்குபவனுடைய ஆற்றலைப் பொறுத்திருக்கிறது. எப்படி யெனில், ஒருவகைத் தங்கத்தினின்றும் பலவித நகைகளைத் தட்டான் செய்வதுபோலாம். மரத்தின் வேரிலிருந்து மற்றொரு மரம் உண்டாவதுபோல சரீரம் உண்டாகிறது. அம்மரம் உண்டாவதற்கு வெளிப் பூதங்கள் துணைக்காரணங்களாக இருக்கின்றன. சிவஞான சித்தியில்,

''சூக்குமங் கெட்டுத்தூலந் தோன்றிடா சூக்குமத்தி
னாக்கியோ ருடல்கிடப்ப தின்றுடலாக்குந் தன்மைக்
கோக்கிய சத்தியுண்டா யுடறருங் காலமுற்று
நீக்கிட மரம்பின் வேரோர்நீண் மரநிகழ்த்துமாபோல்''

''விதிப்படி சூக்குமத்தே யுருவரும் வினையாலிங்கே
யுதித்திடா வுருவமாக வுருவரு மரங்கள்வித்திற்
கதித்தெழு மாமும் வித்துங்கழியும் பின்னழியுஞ்சூக்க
மதிக்கெழு கலைகள் போலவருவது போவதாமே''

எனவருஞ் செய்யுட்கள் இங்கு கவனிக்கற்பாலன.

தேகமே ஆன்மா என்பர் சில மதவாதிகள். மேல் நாட்டு ஆராய்ச்சிக்காரர் சரீரம் அழிந்தபின் ஆன்மா வேறு சரீரத்தை யடைகின்றது என்று கண்டு பிடித்திருக்கின்றனர். புண்ணியத்தைச் செய்தவர்களுக்கு ''பூத சார சரீரம்'' கொடுக்கப்படும். அவர்கள் தேவலோகத்தில் வசித்து இன்பம் அனுபவிப்பர். பாவம் செய்பவர் ''யாதனா சரீரம்'' (பாவ சரீரம்) கொடுக்கப்பட்டு நரகத்திற்குச் சென்று துன்பம் அனுபவிப்பர். இந்த இரண்டின் சேஷத்தை அனுபவிக்கவே நாம் உலகத்துக்கு வருகிறோம். இன்பதுன்பங்கள் ஆகிய இவ்விரண்டையும் அனுபவிக்க வசதியா யிருப்பது இவ்வுலகம்.

"பூதனு சரீரம் போனாற் புரிபட்டரு பந்தானே
யாதனு சரீரமாகி யின்பதுன்பங் களெல்லா
காதனு ராமனை யுய்க்க நாகொடு சுவர்க்கந் தய்த்துத்
தீதிலா வணுவா யோனி சேர்ந் திடுஞ்சிவ னெல்லாம்"

என்பது சித்தியார் செய்யுள். ஆனால் இன்பத்தில் இன்பம் விழையாவிடின், துன்பத்தில் துன்பம் உறாது. "இன்பம் விழையான் இடும்பையியல் பென் பான் துன்ப முறுதலிலன்" என்று தமிழ்மறை முழங்குகிறது.

உடல், இன்ப துன்பம் இரண்டையும் அனுபவிப்பதற்கே கொடுக்கப் பட்டிருக்கிறது. சில சமயத்தார், மிருகப் பிறப்பை விட்டபின் மிருகப் பிறப்பே வரும், மனிதன் மனிதனாகவே பிறப்பான் என்று சொல்லுவர். நம்முடைய சைவசமயத்திலோ மேலான அல்லது தாழ்ந்த பிறப்பு வரும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன் னடி யென்மனத்தே வழுவாதிருக்க வரந் தரவேண்டும்" என்று அப்பர் சுவாமிகளும்,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல் விருகமாகிப் பறவை யாய்ப்பாம் பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்ல சுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந் திளைத்தேன்"

என்று மணிவாசகரும் கூறியிருப்பது மேற் சொல்லியதை வலியுறுத்து கிறது. முற் பிறப்புகளின் வாசனையும் இப்பிறப்பில் தொடரும். சிலந்தி கோச்செங்கட் சோழனாகவும், எலி மாவலிச் சக்கரவர்த்தியாகவும் பிறந்த வரலாறு யாவரும் அறிந்தது. சித்தியாரில்,

"அகலிகை கல்லதானு ளரிபல பிறவியானான்
பகலவன் குலத்திற் றோன்றிப் பாரெலா முழுதுமாண்டு
நிகரிலா வரசனாகுஞ் சிலந்தி நீலேகம் போற்றச்
சகமதி லெலிதா னன்றோ மாவலியாய்த் தத்தானே"

என்று வருவது காண்க. திருக்குறளிலும்,

"ஒருமைக் கட்டான் கற்றகல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து"

என்று கூறியிருப்பது நோக்கற்பாலது.

ஆகவே, அன்பர்காள்! நாம் இவ்வுலகில் வாழ்ந்து வருங்கால் நற்கருமங் களில் ஈடுபட்டு, நற்கதியடைய வேண்டிய வழியைத் தேடவேண்டும் என் பதைக் குறிக்கோளாகக் கொள்ளவேண்டும் என்பதைத் தெரிவித்து என் பேச்சை முடிக்கிறேன்.

கமலை ஞானப் பிரகாசர் செய்தருளிய

# அத்துவித சாரம்

சித்திதரு மெய்ஞ்ஞான தேவ ரகசியமென்னு
மத்துவித சாரத்தை யானருள—முத்தர்மகிழ்
மோனகுரு வாகிவரு முப்பொருளே யிப்பொழுது
ஞானமதை நன்குறவே நல்கு.

திருவ ருட்குரு வாகிய வய்யவுன் செய்யநற் பதங்கண்டும்
மருளு கின்றவி ப்ரபஞ்ச வாழ்க்கையின் மாயையி லகப்பட்டே
புரளு கின்றவித் துடக்கினைத் துரத்தியே புரப்பதை யிதுகாணே
னிருள றுத்தெனக் கின்புற ஞானத்தை யின்றருள் புரிவாயே. க

அண்ட மியாவுமே நிறைந்திடும் பொருளதா யகண்டமுந் தானாகி
விண்ட லங்களாய்ச் சராசர மாகியே விளங்கிடும் பொருளாகி
மண்ட லங்களிற் சகளநிஷ்க ளமதாய் மகிழ்பரப் பிரமத்தைக்
கண்டு ளோர்மெய்ஞ் ஞானத்தை யடைகுவர் கருத்தினி லறிவாயே. உ

என்று மேபரஞ் சேர்வது ஞானமென் றினிதுரைக் கின்றீரால்
நன்று யிவ்வுல கினிற்றரு மங்களுஞ் சிவசே வையுந்தவமுந்
தொன்று தீர்த்தங் களாடலு மகங்களுஞ் சொல்லுசேர்க் கையும்பணியும்
இன்று செய்திடி விதற்கதின் பெருமையி னியற்கையை யருள்வாயே. ௩

தரும மாதியாந் தவங்களைச் செய்திடிற் சனனத் திலேதோய்ந்து
கருமச் செயலினுற் புண்ணிய மோங்கியே கனதனத் தையடைந்து
இருவி னையினு ளாழ்த்தியே யுழலவு மேற்படு மதுதேருய்
பொருளாம் பிரமத்தை யடைந்திடிற் புகல்சதா னந்த மேஞானம். ச

பிரமமென் றுரும் பேசிய நூல்களும் பெரிதாய்
அருவுரு வென்றறைந்து மல்லன வென்று மருளி
கரந்த தெங்குமே நிறைந்தது காணவோ ருருவாய்
இருந்த தென்றிப் பல்வகை யாகவு மியற்றும். ரு

சொல்லு நூல்களிவ் வாறுரைத் திடுமெனிற் சுகமாய்
அல்ல றீர்ந்தியா னடைகுவ தெப்படி யருள்வாய்
தொல்லை யாகுமிப் பிறவிசா கரமெனுந் தொடக்கை
ஒல்லை யிற்சிறி யேற்கறச் செய்யவு முரையாய். ௬

அருள்வ தெப்படி யெனிற்குரு தனையடைந் தோர்க்கு
இருளை நீக்கயிவ் வாறெலா மியற்றுவ ரன்றி
பொருளைக் காண்பது வேறொரு மார்க்கமும் புவியிற்
தெரிந்தி டாதெனத் தேறியே நீதெரி வாயே. எ

தெரியு நற்குரு வெப்படிக் கிட்டுவ தெனக்கு
சரியை யாதியாய்க் கிரியையைத் தேர்ந்துளோர் தமக்கு
தரையி னிற்பொரு ளெடுப்பவர் போற்சக மீது
குரவனு மெதிரத் தோன்றியே குறித்ததைக் கொடுப்பார். அ

குருவி னாலருள் கிடைத்தபின் குவலயக் தனிலே
இருந்து நான்செயும் வாறினை யெனக்கருள் புரிவாய்
திருந்த யோகத்திற் றினம்பர சிவத்தொடு கலந்து
அருந்த வத்தினைச் செய்வது அருள்தனைக் காட்டும். ௯

அருளு மத்தொழில் செயும்வா றதனையு மருள்வாய்
பொருளைக் காட்டுமோர் வழியினை யன்றுதான் பொருந்து
மிருளி லாமலே மாயையை நீக்கியே யென்றும்
பெரிய வாழ்வினைத் தந்துநற் கதியினைப் பெறுவாம். ௧௦

பெரிய வாழ்வினைத் தருமெனப் பேசியே பின்னும்
அரிய மோக்கமு மடையலா மென்றுமே யறைந்தீர்
பொருளை யீதெனத் தெரியவும் போற்றினேன் புனித
அருள்நி றைந்திடு தேவனே யெனக்கரு ளாயே. ௧௧

செய்யு மோர்பொரு ளுணர்ந்துவோம் திருத்தமாய்த் தெரிவாய்
வய்ய மியாவையும் படைத்துநற் கருணையை வைத்து
எய்யும் வாறினைக் காட்டியே யுலகினிற் றானாய்
மெய்யு மாகிய பொருள்பர சிவமதாய் விளங்கும். ௧௨

சிவத்தி னற்பய னின்னதைத் தருமெனத் தெரிய
தவத்தி னிற்சிறந் தோங்கியே நின்றசற் குருவே
பவத்தி னிற்கிடந் துழல்கின்ற படிறனேன் றனக்கு
அவத்தை நீக்கியவ் வாற்றினை யருள்புரி வாயே. ௧௩

அருளுஞ் சிவமது சச்சிதா னந்தமே யாகி
பிரிவு மூன்றதாய்க் காட்டியு முலகதிற் பெரிதாய்த்
தெரிந்த ஞானிகட் கருளியே திருவருட் காட்டும்
பெரிய வார்த்தையைப் பேசவுந் துணிந்திடார் பெரியோர். ௧௪

அறிவி லேற்குநீர் சச்சிதா னந்தமென் றருளி
நெறியி லாதமுப் பொருளென நிற்குமென் றுரைத்தீர்
வறிய னேற்குஅம் முப்பொரு ளென்பதை வழுத்தி
சிறியன் மாறுசொற் கிரங்கியே தெரியவுஞ் செய்வாய். ௧௫

முப்பொருளுஞ் சத்தென்றுஞ் சித்துவென்று மூன்றாகவா னந்தமென் றும்போ
யெப்பொருளுந் தானாகிப் பலவுமாகி யின்பமா யன்பர்களுக் கெளியோ னாகி
இப்புவியிற் சிவமாகிச் சத்தியாகி யினியருத் திரனாகி மாலு மாகி
ஒப்பில்லாப் பிரமனுமா யுயர்சதா சிவமாகி மஹேச னாகி. ௧௬

உருவாகி யருவாகி வொளியுமாகி வுள்ளாகி வெளியாகிப் புறம்பு மாகி
கருவாகிச் சராசரமைம் பூதமாகிக் கரந்தகத் துவமாகிக் காண்போர்க் கன்று
குருவாகி ஞானமாய்க் குணமுமாகிக் கொண்டதோ ரத்துவித துவைத மாகி
அருளாகிச் சச்சிதா னந்தமாகி யன்பர்களின் மனமாகி யான வாறே. ௧௭

அருளினீர் மூன்றுடைய விவரந் தன்னை யவையாவு மெதிற்றோன்று மமைந்தவாறே
ஒருவாறு வடிவேற்கு வப்பிறேனுடு வுண்மையினைத் தெளிவாக வுணரச் செய்து
இருளாகு மனவழுக்கைப் போக்கியென்று மின்பவழி தனைக்காட்டி யெளியேன்
திருவருளால் நோக்கியித் தொடக்கை யெல்லாந் தீர்போக்கின்று நீர்த்தருள்வா றன்னை
ய் மன்றே.

முப்பொருள் விவரந் தன்னை முழுமையு முணர்த்தி னேம்நாம்
இப்பொழு ததுகள் தோன்று மியற்கையை யுரைக்கக் கேண்மின்.

அப்பொழு துரைத்த யாவு மாதி சத்தியி லுதித்ததே
எப்பொரு ளாகி யெங்கு மிருவினை போக்கு மன்றே. கக

சத்தியிற் றேன்று மென்றே சங்கையைத் தெளியும் வாறு
அத்த னேயெனக் குரைத்தி ராதியாஞ் சத்தி தோன்றும்
வித்த கந்தனை யெனக்கு விளங்கவு மருளிப் பின்னு

சத்தி தோன்றுமா றதனையுஞ் சாற்றுநீர் கேண்மின்
எத்த லத்தினு மிடையறு தியங்கிய பொருளாய்
வித்து மாகிய ப்ரமத்தில் விளங்கெழுஞ் சத்தி
அத்தகை மையை யறிந்துளோ ரறிவதாச் சரியம். உக

நிறைந்த வோர்பிர மத்தினின் றுற்ப வித்து
பிறந்த சத்தியென் றுரைத்திரால் வெகுபெரி தாக
அறைந்த வார்த்தையைத் தெரிந்து சொன்னது நிற்க
சிறந்த பிரமமு மெதனிடை யுற்பவஞ் செப்பாய். உஉ

பிரம முற்பவ மெப்படி யென்றுநீ பெரிய
அருமை யானதை வுரையெனக் கேட்கிறு யதுவும்
பெருமை யுள்ளத னுதியாய்ப் பிறங்கியே நிறைந்துங்
கரும மியாவையு நடத்தியே களிப்புறு மதுவே. உந

அய்ய யின்றுநீ ரருளினீர் யாவையு மறிந்தேன்
மெய்ய தாகிய ப்ரமத்தி னுற்பவ மில்லையென்
றய்ய மேதா வனுதிதா னென்றுமே யறைந்தீர்
வைய மிதனின் றன்மையை யருள்புரி வாயே. உச

உண்மை யாகிய பரப்பி ரமத்தி னுண்மையினை
எண்ணில் வேதங் களேற்றியுந் தெரிந்திடா தின்ன
மண்ணி லேதவஞ் செய்துகொண் டிருப்பது மறியாய்
அண்ணல் தன்மையை ஞானியே யறிபவ ராமால். உரு

ஞானி யென்பது யெப்படி யாமுயர் நார்கள்
வானஞ் சூழுல கினிலொரு வரையுநா னறியேன்
வனையோர் களுக்கித் தன்மை யென்றின் புறவும்
ஆன வாறினை யெனக்குநீ ரருள்வீ ரய்யா. உசு

ஞானி யாகுமோர் வழியினை யருளுவோம் நன்குறத் தெரிவாய்நீ
தானவ னாகிடில் ப்ரமத்திற் கலந்தது தழைத்திடு மவர்நாமம்
மோன ஞானியென் றறைவது திண்ணமா மோக்கமு மவர்க்கெய்தும்
ஆன வாறிது வேறிலை யென்றுமே யகத்தினி னறிவாயே. உஎ

அகத்தில் ஞானியின் றிறமதின் சங்கையை யறிந்தேன்
சகத்தி னிற்கிடந் துழலுமோர் தமியனேன் றனக்கு
இகத்தில் ப்ரமமதை யிவ்விதங் கலப்பதென் றியற்றி
சுகத்தில் வைப்ப துணையலா தொருவரு முளரோ. உஅ

பிரம மென்றொரு வத்துவைப் பேச்சினு லறிய லாமென்றுந்
திரம தாகவே யபேதமாய்க் கலக்கவுந் தெரிந்திட நீகேட்டால்
பரம பக்குவம் வந்திடி லவர்க்கியாம் பகருவ ததுவன்றி
நிரும லன்றனைச் சேருமவ் வாறினை நிருமிப் பவருளரோ.

அருளி னீர்பரி பக்குவ மடைந்தவர்க் கலது
மருளு வோர்க்கிது கிட்டுவ தில்லையென மறந்தீர்
தெருளும் பக்குவம் மெப்படி யடையலாந் தெரியக்
குருவே யிப்பொழு தெனக்குரைத் திடுவதைக் கொள்ளாய். ௩0

சரியை யாதியாம் யோகத்திற் றேர்ந்துளோர் தமக்கு
வரிசை யாம்பரி பக்குவ மென்னவும் வழங்கு
முரிசை யாயதை வாயினுற் பிதற்றுவோர் தமக்கு
பெரிய மாகுமப் பொருளினை யெப்படிப் பெறுவார். ௩௧

அய்ய மூன்றையுங் கடந்துநற் பக்குவ மடைந்து
உய்யு வோர்களும் ப்ரமத்திற் றுனவ ளுக
பய்ய வேலை மெய்ப்படி யாகுவர் பதத்தில்
மெய்ய னேயெனக் கருளுவாய் வேண்டிய ததுவே. ௩௨

பிரமந் தன்னையும் யோகிக ளடைவகை பேச
அரிய தாகிய ரகசிய மானதா லதனை
யொருவர் சொல்லினு மறியவு மொருவரு முளரோ
தெரிய மார்க்கமு மில்லையதை வாயினுற் செப்பார். ௩௩

குருவி னுல்முன மறியலா மென்றுநீர் குறித்தீர்
ஒருவரா லின்று வரையினு முரைத்திடா ரென்றீர்
தெரியு மார்க்கமு மெப்படி யறிகுவ தய்ய
அருளி யிப்பொழு தடியனை யாண்டுகொள் வாயே. ௩௪

மோன வாழ்க்கையை வாயினுற் சொல்லவு முளதோ
ஞான வாழ்க்கையை நன்குற வடைந்தவர் நவிலார்
மான தத்தினுற் கலந்திடிற் றுனவ னுவாய்
ஆன வாறிது வறிந்துளோ ரறிகுவ ராமால். ௩௫

மான தத்தினு லறியலா மென்றுநீர் வரித்தீர்
தானத் திடைக்க லந்திடுஞ் சங்கையைத் தாண்ட
வானஞ் சூழுல கத்திடை மகிழ்ச்சியாய் வளரும்
ஞான மெய்க்குரு வேயதைத் தெரியவு நவிலாய். ௩௬

மனம தேகிறி தாயினுஞ் சலனத்தை வாய்ந்தால்
மனத்தி னுலறிந் திடுவது கடினமா மதுவும்
மனத்தி லேயுள வழுக்கெலா மாற்றிடு வோர்க்கு
மனம தேகுரு வாகியே யுனக்கது வழுத்தும். ௩௭

சஞ்ச லத்தையு மடையுறு தவ்வகை மனதும்
நெஞ்ச கமதே குருவதா யெப்படி நிலைத்து
வஞ்ச கந்தனை நீக்கியே யெப்படி வழுத்துந்
தஞ்ச முன்பத மாகிய வெற்குநீ சாற்றாய். ௩௮

அய்ய மனதினை வேறொரு வழிசெலா தடக்கி
பையகா டொறும்பழ கியபழக் கத்தாற் பாரில்
னையு வோர்க்கது கிட்டுவ தலதுகா னிலத்தி
இய்யு மார்க்கமும் வேறில்லை யென்றுநீ யுணர்வாய். ௩௯

ஒருவ ழிப்பட மனதினைச் செலுத்தவு மொழுங்காய்
வருபழக் கமென்ப தெப்படி வாய்த்திடு மதிவா

விருவினைத் தொடர்பு நீங்கவு மெளியனேற் கிரங்கி
அருள்பு ரிந்துவவ் வாறினை யறைகுவி ராமால். ௪0

இவ்வகை தனையடைந் துளோரெவ ராயினு மெளிதினி லய்ய
பவ்வமாம் பிறவியு மில்லவ ராகியே பரம்பொரு ளதுவு
மவ்வழி யெனக்காந் தமுழு சியையிழுப் பதுபோ லாகும்
அவ்வழி யதாம்வே றிலையத னையுமவ ரவாறி வாரே. ௪௧

சிறிய னேற்குநீ ரருளிய வாறினுற் றெரிந்தேன்
அறிவி லேற்கோர் சங்கை யொன்றுள தய்ய
குறிய காந்தமு மூசியைக் கவர்வதின் கொள்கை
வறிய னேற்கதின் மார்க்கமுந் தெரியவே வமுத்தாய். ௪௨

சாக ரத்திடைச் சார்ந்திடு மாறதன் னினமாய்ச்
சேக ரிக்குமோர் தன்மையாம் பிரமத்தின் செயலே
மாக ரத்திடை நெல்லியங் கனியென மகிழ்வாய்
யேக மாகிய பிரமமா யிருப்பரென் றிசைப்பாம். ௪௩

பொருளு மாகிய ப்ரமத்தி னுண்மையைப் பொலிவுற வடியேற்கு
அருளி னீரது நிற்கவோர் பிரமமா யாகு வோரதைமீண்
டிருவி னையிலுஞ் செல்வரோ வதனை யெற்குரைத் திடல்வேண்டுந்
திருவ ருட்குரு வாகிய வய்யனே தெளிவுறச் செய்வாயே. ௪௪

எச்ச லமது வார்த்தா யோடியே யெழிற்கட லதனைச்சார்ந்
தச்ச லமதே திரும்பிடி லாற்றினி லளர்ச்சல மல்லாம
னிச்சை யாகிய நற்சலங் காண்பது யிலையென மிகத்தேருய்
நிச்ச யப்பொரு ளடைந்தவர் மீண்டிடில் நின்ம லனுவரே. ௪௫

கடற்ச லமது லவன மாகியே காண்கவு முருவாகும்
படர்ந்த வுப்பினைக் கடறனிற் சேர்த்திடிற் பார்க்கவு முருவாமோ
அடர்த்த லாகியே ப்ரமத்தைச் சார்ந்தவ ரதனையும் பிரிவுபெறூர்
இடர்த்த லாயினும் ப்ரமமா யன்றவ ரிருப்பரென் றறிவாயே. ௪௬

பந்த பாசமாம் பிறவியி னுழல்படி றனேன்றனக் கோருருவாய்
வந்து யிங்ஙனந் தொடக்கினை மாற்று மாறெலா மிகத்தெளிவாக
சிந்தைவைத் துன்னருள் சுரந்தனை யதிற்சேட மொன்றுளது சாத்திரத்தில்
முந்து வோர்க்கிரு விரலினுற் காட்டிடு மோக்கம தருள்வாயே. ௪எ

பெரிய வார்த்தையைப் பேச விப்பிர பஞ்சந் தனிலார்க்கு
மரிய தாகு மியாமறிந் தமட்டருள் வோமதனைக் கேட்பாய்நீ
தெரிய விருவிரல் சேர்த்தசின் முத்திரை சேர்ந்திடும் ப்ரமத்திலென்றே
விரியும் விரல்தனைக் குவித்தவக் காரணம் வேறில யறிவாயே. ௪அ

உற்பத்தி லயமுதற் பிரமத்தி னுண்மையு மொப்பிலா மோக்கத்தின்வாறும்
நற்புத்தி யெற்குற நவின்றனை சங்கையு நன்குறத் தெளிவுற்றேனைய
அற்பத்தி னென்றுள ததுவெனில் சைவமாஞ் சித்தாந் தத்திற்புகலும்
கற்பித்த பரசிவ மன்றிவே றிலையெனக் கழறிய வாற்றினைக் காட்டாய். ௪௯

அய்யசித் தாந்தத்தி லோர்சொலு நூல்களு மதுவிது வொன்றாத்
துய்யபர சிவமென் றதாற்பிர மமாஞ் சொலும் சிவம்வே றல்ல
வய்யதி திற்சித் தாந்தவந் நூல்களின் வரம்பினைத் தவிர்க்க வொண்ணு
துய்யும்வகை பரசிவ மதாயிருப் பதுவோர் வழியது வாமே. ௫0

அருளினீர் சித்தாந் தத்தின் மார்க்கமு மறிந்தேன்
பொருள தாகிய வாம மார்க் கத்திற் புனித
திருவு ருவமாஞ் சத்தியே பிரமமென் றருளும்
பருந்தக மறைய விளங்கவும் பாரினி லருளாய். ௫௧

பிரம மாகிய வத்துவிற் பிரிந்துற் பவமாய்
பரமசத் தியாய்ப்பிர பஞ்சத் தனைமுதற் படைத்தும்
வரன்முறு தாய்த்தெய் வங்க ளின்றிடும் வகையால்
கரையிற் சத்தியே ப்ரமமென் றருளியே சாற்றும். ௫௨

முன்னையு மெனக்குநீர் பிரமத்தைச் சேர்வதேமுத்திசாதனமென் றுரைத்தீர்
பின்னுஞ் சித்தாந் தத்தின் மார்க்கமும் பிரியுமோர் வழியெனப்பேசி
அன்ன வகையதை முன்றதா யுரைத்திடி னடியனேன் றெளியுமோர்மார்க்கம்
நன்னில மையென்றரு ளியென்பா சத்தைநன் கறச்செய் யவுநவில்வாய்.

காம ரூபந் தரித்தி டும்பொரு ளெலா நாசமா முடிவினி லய்ய
தூமங் கண்டுளோர் தூமத் தையின்றிடுஞ் சொல்லுமக் கினியினாலன்றோ
சேம மாகிய ப்ரமத்தை யன்றியே நித்தியா னந்த சாயுச்யம்
தாம தாகிய பேர்க்குறு மல்லது சகள ராற்றரு வதுமிலையே. ௫௪

பொருந்த வெற்குநீர் சங்கையைத் தெளிவுறப் புகன்றீர்
அருந்த வப்பயன் பெற்றனன் னதுவெலா நிற்க
பருந்த வத்தினாற் றரையினிற் சிவன் பலவு
மிருந்த வுற்பவ மெதனிடை யென்பதை யியற்றாய். ௫௫

அய்யபி ரமத்திற் சிவனு மனுநியா யடங்கி
உய்யுஞ் சிருட்டியிற் பிரமத் தைவிட்டுற் பவித்து
வையத் தனிலது வந்திடு மென்ன வறிவாய்
மையுமூ ழியிலனுக் களாய்ப்பி ரமத்தி னன்னும். ௫௬

எண்ணில் சிவனை யனுநியாய்ப் பிரமத்தி லென்றும்
நண்ணி வாய்ந்திடு மென்றுமே நவிற்றினீ ரையா
மண்ணி லுள்ளவ ருழியிற் ப்ரமத்தின் மன்னும்
அண்ண லீலையா மென்றுமே யருளினீ ராமால். ௫௭

அருளும் வகையினாற் சிவனும் ப்ரமத்தி லாங்கு
ஒருமை யாகிய வாறிது வியற்கையா யொன்றாய்
மருவிநிற் பதான் ஞான யோகமென வழுத்தாய்
இருவி னையிலா திருந்திடி லென்னவெற் கருள்வாய். ௫௮

சிவன் யாவுமே வனுக்களாய் நின்றிடுஞ் சென்மங்க ளதனை வாய்ந்து
பூவில் சேர்ந்திடுங் காரண ரூபமாய்ப் பொருந்திடும் ப்ரமத்தின் லீலை
நாவில் ஞானமாந் தொழிலடைந் தோர்க்கிலை சனனமு மனுக்களு மின்று
தாவிலாகிய ப்ரம மாய்நி திக்யந்தொ டக்கற வாழ்வரே. ௫௯

பிறவிதோறு மியான்பெற்ற வப்பலத்தி னாற்பெற்றன னீ குருவாக
நிறைவதா கியபிரம மாஞான மதைநித்தியா னந்தமாய்ப் பொருத்தி
அறிவிலேற்கு நீரருளிய கிருபைக்கியா னடுத்தகைமா றினையறிகின்றிலேன்
இறப்பிலா தெனைக்காத்த மெய்க்குருவே நின்னிணையடி பணியுங் கைமாறே.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# உமாபதிசிவனார் திரட்டியருளிய அருள்முறைத் திரட்டு உரை

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி ஏ.]

(மலர் ௬, இதழ் ௬, 152-ம் பக்கத் தொடர்ச்சி)

நான்காவது அடி திருக்கழுமலத்தில் வாழ்கின்ற அடியார்களுடைய பெருமையைக் கூறுகின்றது. ஓர் ஊருக்குச் சிறப்பானது அதன்கண் வாழும் அடியார்களினாலும் அவ்வடியார்கள் சார்ந்து அருள் விளங்கச் செய்யும் திருக்கோயிலினாலும் உண்டாகிறது என்ற உண்மையும் இப்பாட்டிற் குறிப்பிடப்பட்டது. "ஐம்புலன்கள் வாய்ப் போகாமலும் முக்குணங்கள் வாய் மூடாமலும் ஊடாமலும் காவா" என்பதனால் அடியார்கள் புத்தி தத்துவத்தின் வழி உலக விடயத்தைப் பற்றாது நின்று விடயத்தின் கண்ணுள்ளதாகிய புறப்பற்றை ஒழித்தல் வேண்டும் என்பதும் "நாலந்தக் கரணமுமொரு நெறியாய்ச் சித்திக்கேயுய்த்திட்டு" என்பதனால் அவர்கள் அகங்காரம் மனங்களின் வழி தங்களைப் பற்றாது புருட தத்துவத்தின் கண்ணுளதாகிய அகப்பற்றை ஒழித்தல் வேண்டும் என்பதும், "பத்திப் பேர் வித்திட்டு" என்பதனால் முன் அசுத்த மாயையிலுள்ள அராக தத்துவத்தின்கண் பொதுமையாக நிகழ்ந்த தங்கள் இச்சையை அவர்கள் சிவனிடத்திலே திருப்பிச் சிவ அராகமாக மாற்றி அவனது அருட் பேரொலியைத் தங்கள் தூய உள்ளத்தில் உணரும் இன்ப உணர்வு உடையவர்களாதல் வேண்டும் என்பதும் கூறப்பட்டன. பும்சத்துவ மலத்தோடுகூடிய ஆன்மா, உலக போகம் நுகரும் தன்மை (போததிருத்துவம்) முற்றிலும் நீங்குதற்கு அவ்வுலக போக நுகர்ச்சியிற் செலுத்துவனவாகிய மண் முதல் அசுத்த மாயா கலா தத்துவம்வரை உள்ள தத்துவங்களிற்றோய்தலினின்றும் நீங்கித் தூய்மை அடைதல் வேண்டும் என்பதும் இப்பாட்டிற் கூறப்பட்டது.

அகனமர்ந்த வன்பினரா யறுபகை செற்றைம் புலனுமடக்கி ஞானப்
புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர் கோயில்
தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க் கந்திகழச் சலசத்தியுண்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட மணஞ்செய்யு மிழலையாமே. ௫௪

(உரை) ஐம்புலனும் அகத்து அடக்கி - தமது ஐம்பொறிகளையும் புறத்தே உலக விடயங்களிற் செல்லவொட்டாது தம்மிடத்து (ஆன்மாவினிடத்து) அடங்கி நிற்கச் செய்து; அறுபகை செற்று - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என்ற (பஞ்சக்கிலேசங்களுள் அடங்குவனவாகிய) அறு பகைகளையும் வென்று; அகன் அமர்ந்த அன்பினர் ஆய் - புறம் சிறிதும் நோக்காது உயிரினிடத்து விளங்கும் நிறைந்த அன்பினை உடையவராய்; ஞானப்புகல் உடையோர் - மெய்ஞ்ஞானத்தையே களைகணை (தாரகமாகக்) கொண்டு அதனுள் அடங்கித் தாமே அம் மெய்ஞ்ஞானமாய் மிளிர்கின்ற அடியார்களுடைய; உள்ளம் புண்டரிகத்துள்ளிருக்கும் புராணர் கோயில் - தூய உள்ளமாகிய தாமரைப் பூவினையே உறைவிடமாகக்கொண் டெப்பொழுது மெழுந்தருளியிருக்கும் பழமையாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கோயில் (இருக்கிற இடமானது); சங்கு வர்க்கம் உள - சங்கு என்ற வகைக்குச் சேர்ந்துள்ளனவாகிய உயிர்ப் பிராணிகள்; தகவு உடைநீர் மணித்தலத்து - ஆழமும் பெரிதுமான நீரையுடைய அழகிய தாமரைத் தடாகத்தில்; திகழ் அச்சலசத் தி உள் - விளங்குகின்ற அந்தச் செந்தாமரைப் பூவாகிய ஓமகுண்டத் தீயின்கண்; மிக உடைய புன்கு மலர்ப் பொரியட்ட

மணம் செய்யும் மிழலையாமே - மிகுதியாக உடைய புன்னைவெண் மலர்களாகிய பொறி களைப் பெய்து தங்களுக்குள் மணம் செய்கின்ற திருவீழிமிழலையாகும்.

(விளக்கம்) அறு பகை செற்று - அறுபகை என்பதற்கு மேலே 56-வது பாட்டின் கீழ் எழுதப்பட்ட விளக்க உரையைப் பார்க்க ; அகன் அமர்ந்த அன்பினராய் - அகன் அமர்ந்த அன்பு என்பதற்கு மேலே 56-வது பாட்டின் கீழ் எழுதப்பட்ட விளக்க உரையைப் பார்க்க. அகன், அகம் என்பதன் போலி ; புராணர் - முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளா யுள்ளவர் ; கோயில் - இங்கே கோயிலிருக்கும் இடத்தை அல்லது ஊரைக் குறிக்கிறது; சங்கு வர்க்கம் உள - சங்குஉள வர்க்கம் - சங்கு வர்க்கம் உள என மாறுக ; உள - குறிப்பு வினையா லணையும் பெயர், பன்மை. உள்ளனவாகிய பிராணிகள் : தகவு - தகுதி - ஆழத்தினுலும் நீளம் அகலங்களினுலும் உண்டாகின்ற தகுதி ; சலசம் - வடமொழிச் சொல். ஜலஜம் - நீரிற்றோன்றிய தாமரை ; பொறி அட்ட மணம் செய்யும் - அட்டி என்பது அட்ட எனத் திரிந்தது ; விகாரம். இப்பாட்டின் முன் இரண்டு அடிகளில் சிவபெருமான் அடியார்களுடைய தூய உள்ளத்தில் உறைந்திருப்பவன் என்பது கூறப்பட்டது; பின் இரண்டு அடிகளில் இயற்கை வருணனை கூறப்பட்டது.

கழித்துணையாம் பிறவிவழித் துக்கநீக்குஞ்
 சுருள்சடை யெம்பெருமானே தூயதெண்ணீ
ரிழிப்பரிய பசுபாசப் பிறப்பைநீக்கு மென்றுணையே
 யென்னுடைய பெம்மான்றம்மான்
பழிப்பரிய திருமாலு மயனுங்காணுப் பரிதியே
 சுருதிமுடிக் கணியாய் வாய்த்த
வழித்துணையா மழபாடி வயிரத்தூணே
 யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. ௫௮

(உரை) பழிப்பரிய திருமாலும் அயனும் காணுப் பரிதியே - தேவர்களாலும் மக்களாலும் புகழ்தற்கு உரியவராகிய திருமாலும் அயனும் (முறையே அடியும் முடியும் தேடியும்) அவர்களால் அறியமுடியாத பகலவனொளி போன்று தீப்பிழம்பாய் நின்றவனே; (அவ்வாறு தவவலியாலன்றி உடல் வலியால் நின்னைக் காண முயன்ற திருமால் அயன்களுக்கு நீ அறிதற்கரியாதவனு யிருந்தாலும் உண்மை அன்புடைய அடியார்களுக்கு எளியவன் ஆதலின்) ; நான் சுழிப்பிறவிவழி துக்கம் நீக்கும் - நான் (நின்னை ஆழநீர்ச்) சுழியைப் போலுள்ள உலக வாழ்க்கைப் பிறவி வழியில் நிகழும் துன்பங்களை ஒழிக்கின்ற ; துணையாம் தூயதெண்ணீர் சுருள்சடை எம்பெருமானே - எனது துணையாய் மலம் நீங்கித் தெளிந்த சுத்தமாயை ஒளியாய் எனது (உள்ளத்தில் விளங்கும்) சுருண்ட சடையுடைய எனது பெருமானே (1) (என்றும்); இழிப்பரிய - இகழ்ச்சிக்குரியதல்லாத ; பசுபாசப் பிறப்பை நீக்கும் என்னுடைய பெம்மான் தம்மான் என் துணையே - உயிர்ப்பற்று உலகப் பொருட்பற்றுக்களாலுண்டாகிற உலக வாழ்வுப் பிறப்பினையும் (இறப்பினையும்) ஒழிக்கும் எனக்குக் கடவுளும் தலைவனுமாய் எனது உள்ளத்தில் உயிரொளியாய் விளங்கும் என் துணையே (2) (என்றும்); சுருதி முடிக்கு அணியாய் வாய்த்த வழித்துணையாம் மழபாடி வயிரத்தூணே - வேதாகமங்களினது சிரசுக்கு அழகாயும் அரிதிற் கிடைக்கப்பெற்ற எனது பேரின்ப வாழ்க்கை வழித்துணையாகியும் எனது உள்ளத்தில் உணரப்படுகின்ற திருமழபாடியின்கண் எழுந்தருளியிருக்கும் வயிரத் தூண் போன்று அருட்பேரொளியாய் விளங்கும் சிவபெருமானே (3) (என்றும்); என்று என்று - எனது நாவினுற் சொல்லிச் சொல்லி; அரற்றி நைகின்

றேன் - (அன்பினால் அகங்குழைந்து உருகி) அழுது தன் வயமழிந்து நின்வயப்பட்டு நின்னோடு கூடிப் பேரின்பம் உணர்கின்றேன்.

(விளக்கம்) முதலாவது அடியை சுழிப்பிறவி வழித் துக்கம் நீக்கும் தூயதெண் ணீர் சுருள்சடை எம்பெருமானே என்று உரைநடை செய்க ; சுழிப்பிறவி - ஆழநீர்ச் சுழியானது தன்னைச் சேர்ந்த பொருளை நீருக்குள்ளே இழுத்து நீர்நிலைக்கு மேலே வரவொட்டாமற் செய்தல்போல உலக வாழ்க்கைப் பிறவியானது மக்களை உலக விடய போகத்தில் அமிழ்த்தி அதினின்றும் தப்பிச் சிவன் திருவடியை அடையவொட்டாமற் செய்தலினால் அடிகள் பிறவியைச் சுழியாக உருவகம் செய்தார். துக்கம் - உலக வாழ்க் கையில் இன்பமிருப்பினும் அவ்வின்பம் கணந்தோறும் மாறுவதாய்ப் பேரின்பத்தை நோக்கத் துன்பமாயிருத்தலினால் பிறவி வழித்துக்கம் என்றார். துணையாம் - துணையா கும் என்பது துணையாம் எனக்குறுகியது. தூயதெண்ணீர் - தெள் + நீர் = தெண்ணீர் நீர் என்பது இங்கே ஒளியைக் குறிக்கிறது. நவமணிகளின் ஒளி நீர் என்று பேச்சு வழக்கிலும் கூறப்படுகின்றது. தூயதும் தெளிந்ததுமான சுத்தமாயையின்கண் விளங் கும் அருள்ஒளி; அசுத்தமாயை பிரகிருதிமாயைகளில் மலத்துடன்விரவிய ஒளியினின் றும் பிரித்தற்கு தூயதெண்ணீர் என்றார்.இந்த அருள்ஒளி அடியாரது தூய உள்ளத்தில் விளங்குவதாயுள்ளது. இழிப்பரிய பசுபாசப் பிறப்பை நீக்கும் - இழிப்பரிய - என்பதி லுள்ள அருமை பழிப்பரியஎன்பதிற்போல இன்மை என்ற பொருள்படுகின்றது.இகழ்ச் சிக்குரியது அல்லாத. அதாவது புகழ்ச்சிக்குரியது.ஏகான்மவாதிகள் முதலிய ஒருசாரார் உலகவாழ்வு இழிக்கத்தக்கது என்று கூறுதல்போல அல்லாது மலம் நீங்கிப் பேரின்பப் பயனை அடைதற்காகவே உலக வாழ்வு இறைவனால் அமைக்கப்பட்டுள்ளது என்று சைவ சமயம் கூறுதலால் அடிகள் இழிப்பரிய பிறவி என்றார். உலகவாழ்க்கையிலுள்ள பிறப்பு உயிர்ப் பற்றினையும் பொருட் பற்றினையும் பற்றி வருதலால் பசுபாசப் பிறப்பு என்றார். என்னுடைய பெம்மான் தம்மான் - பெருமான் பெம்மான் என மருவியது. பெரியவன் - கடவுள். தம்மான், தலைவன், தம்பிரான் என்பதுபோல. சுருதி முடிக்கு அணி - சுருதி என்பது கேட்கப்படுவது ; வேதாகமங்களைக் குறிக்கிறது. அபர ஞானத்தை உணர்த்துகிற வேதாகமங்கள் பரஞானத்துக்கும் (மெய்யுணர்வுக்கும்) வழியா யிருத்தலின் சுருதி முடிக்கு அணி என்றார். முடி - சிரசு ; தலை. அதாவது முடிந்த முடிபு ; அணி - அழகு. மழபாடி வயிரத் தூண் - வயிரத் தூண் என்பது வயி ரத்தூண் ஒளியைக் குறிக்கிறது. வயிரத்தூண் மிக்க ஒளியுடையதாய் அதன் அணி மையிலுள்ள பிற பொருள்களின் ஒளிகளைத் தனக்குள் அடங்கச் செய்து தான் அவ் வொளிகளுக்கு அடங்காது ஒளிருதல் போல, சிவபெருமான் தனது அருட்பேரொளி அறிவால் எவ்வெவ் வுயிரினது அறிவையும் தனக்குள் அடங்கும்படி செய்து அவை யாதொன்றிலும் பற்றாதவனாய் சுயம்பிரகாச முடையனாய் விளங்குகின்றான் என்பது கூறப்பட்டது. அரற்றி நைகின்றேனே - அரற்றுதல் - அழுதல் ; அகங் குழைந்து உருகி அழுதல். நைதல் - இங்கே தேய்தல் அல்லது குறைதலைக் குறிக்கிறது ; அதா வது சிவத்தன்மை குறைந்து சிவத்தன்மை மிகுதல். சீவத்தன்மை குறைந்து சிவத் தன்மை மிகுதலால் ஆன்மா தன்வய மழிந்து சிவன் வயமாகி அவனுடன் வேறற ஒன் றிக் கலந்து பேரின்ப முறுதல் உண்டாகிறது. இந்தத் தன் அநுபவத்தை அடிகள் இங்கே கூறுகின்றார். "சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றும் திருப் பெருந் துறையுறை சிவனே" என்று மாணிக்கவாசக அடிகள் கூறி அருளினமை காண்க. திருநாவுக்கரசு அடிகள் இந்தத் தேவாரப்பாட்டின் பதவுரையிலே 1, 2, 3 என எண்ணிட்டுக் குறிக்கப்பட்ட மூன்று சொற்றொடர்களையும் அடிக்கடி கூறி அகங் குழைந்து உருகி அழுது தன்வய மழிந்து சிவன்வயப்பட்டுப் பேரின்பம் உணர்ந்த தாகத் தமது அநுபவத்தைக் கூறுகின்றார். அந்தச் சொற்றொடர் ஒவ்வொன்றிலும் சிவபெருமான் தமது அருமைத் துணையாய்த் தமது உள்ளத்தில் அருள் ஒளியாய்

விளங்கினதாகவும் அவர் கூறுகின்றார். முதலாவது ஒளியானது சுத்த மாயையில் விளங்கும் தூய அருள் ஒளியையும் இரண்டாவது ஒளியானது ஆன்மாவின்கண் விளங்கும் அருள் ஒளியையும் மூன்றாவது ஒளியானது தனி அருள் ஒளியையும் குறிக்கின்றன. முதலாவது அருள் ஒளியால் பொருட்பற்று (புறப்பற்று) நீக்கமும் தத்துவ சுத்தியும் தத்துவ தரிசனமும், இரண்டாவது அருள் ஒளியால் பொருட் பற்றுடன் உயிர்ப் பற்று (அகப்பற்று) நீக்கமும் ஆன்ம சுத்தியும் ஆன்ம தரிசனமும், மூன்றாவது அருள் ஒளியால் பொருட்பற்று உயிர்ப் பற்றுகள் நீங்கின காரணத்தால் தன்வய மழிந்து சிவன்வய மடைதலும் சிவதரிசனமும் சிவயோகமும் உண்டாகின்றன. முதலாவது அருள் ஒளி இரண்டாவது அருள் ஒளியிலும் இரண்டாவது அருள்ஒளி மூன்றாவது அருள் ஒளியிலும் ஒன்றினொன்று அடங்கும் தன்மை உடையன. முதலாவது அருள்ஒளி மாயை மல நீக்கத்துக்கும் இரண்டாவது அருள்ஒளி வினைமல நீக்கத்துக்கும் மூன்றாவது அருள்ஒளி ஆணவமல நீக்கத்துக்கும் காரணமாயுள்ளன. இந்த ஒளிகள் ஞானத்து யோகமாகிய சிவயோக நிலையில் விளங்கும் ஒளிகள். இந்த மூன்று ஒளிகளும் அகண்ட பேரொளியில் அடங்குவன. இந்த மூன்று ஒளிகளையும் திருமூலர் 2808-வது திருமந்திரத்தில், "அறிவுக் கறிவாம் அகண்ட வொளியும் பிறியா வலத்தினிற் பேரொளிமூன்றும், அறியா தடங்கிடி லத்த னடிக்குட், பிரியா திருக்கிற் பெருங்கால மாமே" என்று கூறியருளினர். மாணிக்கவாசக அடிகள், "சோதியாய் எஞ்ஞான்றும் அன்பர் தொடர் வறுத்து" என்று முதலாவது ஒளியையும், "சோதியாய் மருளகற்றி" என்று இரண்டாவது ஒளியையும், "சோதியாய் இன்பம் பெருக்கி" என்று மூன்றாவது ஒளியையும் திருவாசகம் திருவெண்பா 11-வது பாட்டிற் குறிப்பிட்டருளியது காண்க.

மேனியிற் சீவரத்தாரும் விரிதருதட்டுடை யாரும் விரவலாகா
வூனிகளாயுள்ளார் சொற்கொள்ளாது முள்ளுணர்ந் துய்ம்மின்றொண்டர்
ஞானிகளாயுள்ளார்க ணான்மறையை முழுதுணர்ந்தைம் புலன்கள்செற்று
மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து தவம்புரியு முதுகுன்றமே. ௩௬

(உரை) தொண்டர் - சிவபுண்ணியத் தொண்டு செய்யும் அடியார்களே; மேனியிற் சீவரத்தாரும் - தங்கள் உடம்பிலே துவர் ஆடையைத் தரித்திருக்கிற புத்தர்களுடனும்; விரிதருதட்டு உடையாரும் - அகலமான பனையோலைத் தடுக்கினை ஆசனமாக உடையவராகிய சமணர்களுடனும்; விரவலாகா(து) (உம்) - சேராமலும்; ஊனிகளாய உள்ளார் - உடம்பேதாம் என்ற உணர்வுடையர்களாகிய அந்தப் புத்தர் சமணர்கள்; சொற் கொள்ளாதும் - கூறுகிற சொற்களை உங்கள் உள்ளத்திலே உண்மைகளாகக் கொள்ளாமலும்; ஞானிகளாய் உள்ளார் - அருள் நூல்களைக் கற்றுக்கேட்டுச் சிந்தித்துத்தெளிந்த மெய் அறிவு உடையவர்களும்; நான்மறையை முழுது உணர்ந்து நான்கு வேதங்களையும் ஐயம் திரிபு இன்றி அறிந்து அவைகளிற் கூறப்பட்டுள்ள முடிவான பொருளை உள்ளத்தில் உணர்ந்து; ஐம்புலன்கள் செற்று - மெய்வாய் கண் மூக்குச் செவிகளாகிய ஐந்து பொறிகளையும் உலக விடயங்களிற் செல்ல வொட்டாது வென்று; மோனிகளாய - உலக விடயவாதனையினின்றும் முற்றிலும் நீங்கினவர்களாய்; முனிச் செல்வர் முனிவர்களாயுள்ள அருட்செல்வர்; தனித்திருந்து தவம் புரியும் - தனியாக இருந்து கொண்டு தவம் செய்கின்ற; முதுகுன்றம் - திருமுதுகுன்றம் என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டருளி யிருக்கின்ற சிவபெருமானை; உள் உணர்ந்து - உங்கள் உள்ளத்தில் வேறற ஒன்றி உணர்ந்து; அங்கு - அவ்வுள்ளத்தில் (சிவமாம் தன்மையை அடைந்து); உய்மின் - பிறவித் துன்பத்தினின்றும் தப்பிச் சிவபெருமானுடைய திருவடி நிழலின்கண் வாழ்ந்து பேரின்பம் உடையவர்களாய்ப் பிழையுங்கள்.

(விளக்கம்) தொண்டர் - விளிப்பெயர் - தொண்டர் என்பதிலுள்ள ஈற்றயல் அகரம் ஈகாரமாயிற்று. மேனியின் சீவரத்தார் - மேனி என்பது வடிவம். அது இங்கே

ஆகு பெயராய் உடலைக் குறிக்கிறது. சீவரத்தார்=சீவரம்+அத்து+ஆர் அத்து சாரியை, ஆர் - உயர்திணைப் பலர் பாற் படர்க்கை விகுதி; சீவரம்=வடமொழிச் சொல் சிவப்பு. அது இங்கே புத்ததுறவிகள் தரிக்கிற சிவப்பு ஆடையைக் குறிக்கிறது. சீவரத்தார் - சிவப்பு ஆடையைத் தரிக்கிறவர்களாகிய புத்தத் துறவிகள், விரிதருதட்டு உடையார் - விரிதரு - விரிந்த; அகலமான. தட்டு - ஆசனத்தடுக்கு; சமணர்கள் கையில் வைத்துக்கொண்டிருக்கிற பனையோலைத் தடுக்கு; சமணர்களைக் குறிக்கிறது. விரவலாகா - விரவலாகாது என்பது விரவலாகா என ஈற்று உயிர் மெய்'து' தொக்கி நின்றது; விரவலாகாது என்பதற்குப்பின், கொள்ளாதும் என்பதிலுள்ள உம் கூட்டுக. அடியார்களல்லாதாருடைய இணக்கம் அடியார்களைச் சிவன் திருவடியை மறப்பித்து மீளவும் மலங்களில் வீழ்த்துமாதலான் புத்தர் சமணர்களுடன் விரவலாகாது என்றார். ஊனிகளாயுள்ளார் - ஊன் ஆகுபெயராய் உடலைக் குறிக்கிறது; ஊனிகள் இ - வினை முதற் பொருளை உணர்த்தும் விகுதி - உடலை உடைய்வர்கள், அதாவது உடலையே தாங்களாக உணரும் அறிவினை உடையவர்கள்; புத்தர்களும் சமணர்களும் தங்களிடத்தில் இறைவன் உள்ளும் புறமும் நிறைந்திருக்கிறான் என்னும் உணர்வு இல்லாதவர்களாதலின் அவர்களை அடிகள் ஊனிகள் என்றார். ஞானிகள் - மெய்ஞ்ஞானத்தை உடையவர்கள், அருளால் அறியும் மெய்யறிவு உடையவர்கள்; இரண்டாவது அடியில் ஊனிகள் என்றதற்கு மூன்றாவது அடியில் ஞானிகள் எனவும் 4-வது அடியில் மோனிகள் எனவும் நேர் எதிரிடைகளாய்க் கூறியிருத்தல் காண்க. மோனிகள் - மோனமென்பது ஞான வரம்பு என்று ஔவைப் பிராட்டியார் கூறியபடி மோனம் என்பது உயிர் விடயங்களாலும் விடயவாதனைகளாலும் சிறிதும் தாக்கப்படுதலின்றி அமைதி (சாந்தம்) பெற்று அந்த அமைதிகாரணமாக மெய் உணர்வு பெறும் நிலையைக் குறிக்கிறது. முனிச்செல்வர் - முனியாகிய செல்வர் முனிகளாகிய செல்வர்; ஒருமைப்பன்மையக்கம்; முனிதல் வெறுத்தல்' உலக விடயங்களை வெறுத்து அருளையே நிறைந்த செல்வமாக உடைய பெரியார். தனித்திருந்து-மௌனத்துக்குத் தனிமை துணையாயுள்ளது; இறைவனோடு கலந்து இன்பம் உணரும் மோனஞானிகள் தனிமையினையே விரும்புவார்கள். முதுகுன்றம் - இது திருமுது குன்றம் (விருத்தாசலம்) என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டருளியிருக்கும் சிவபெருமானைக் குறிக்கிறது.

கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளியே னாகிநின்று தேடினே னாடிக் கண்டேன்
உள்குவா ருள்கிற் றெல்லா முடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட் டேனே. கூ0

(உரை) கள்ளனேன் - வஞ்சகனாகிய நான்; கள்ளத் தொண்டாய் - (நான் சமண சமயத்தி லிருந்த காலத்தில்) முன்னே, சிவபெருமானுக்கு ஆட்பட்டுத் தொண்டு செய்யாமல் பொய்யான சமணசமய ஆசிரியனா யிருந்து தொண்டு செய்தவனாய்; காலத்தைக் கழித்துப் போக்கி - (கிடைத்தற்கரிய மானிடப் பிறவி வாழ்க்கைக்) காலத்தை நல்வழியிற் பயன் படுத்தாது வீணாகப் போக்கிவிட்டு; தெள்ளியேன் ஆகி நின்று - (சிவநெறியை நான் அடைந்து சிவபெருமானால் ஆட்கொள்ளப் பெற்ற பொழுது) எனது உள்ளத்தில் விளங்கும் அருளொளியை அறியும் தெள்ளறி வுடையவனாய் நிலை பெற்று நின்று; நாடித் தேடினேன் - உலகவாழ்க்கைப் பற்றுக்களை முற்றிலும் விட்டுச் சிவபெருமானையே நினைக்கும் கருத்து உடையவனாய் அவனைத் தேடினேன்; கண்டேன் - தேடின தேட்டத்தின் பயனாக அவனை எனது உள்ளத்திலே மெய்யுணர்வினால் உணர்ந்தேன்; உள்குவார் உள்கிற்று எல்லாம் - நினைக்கிற மாந்தர்கள் தங்களுடைய உள்ளத்தில் நினைக்கின்ற கருத்துக்களை எல்லாம்; உடன் இருந்து அறிதி

என்று - அவர்களுக்கு வேறாக நின்று அறிவிப்பதுமன்றி அவர்களுட னிருந்தும் நீ அறிந்து வருகிறாய் என்று (நான் எனது தெள்ளிய அறிவினால் அறிந்த பொழுது :) வெள்கினேன் - நீ எனது உள்ளத்தி லிருப்பதை அறியாதிருந்த காலத்தில் நான் மறைவாக நினைந்த வஞ்சக் கருத்துக்களை நோக்க எவ்வாறு எனது அறியாமை இருந்தது என நினைந்து வெட்கம் அடைந்தேன் ; நாணும் வெள்கி விலா இறச் சிரித்திட்டேன் - நான் அவ்வாறு வெட்கம் அடைந்து எனது விலா எலும்புகள் முறிந்து விடுமோ என்று தோன்றும் வண்ணம் பெருஞ்சிரிப்புச் சிரித்தேன் ; ஆதலின் தொண்டர்களே நீங்கள் சிவபெருமானுக்கு உண்மையான தொண்டு செய்து உய்மின் என்பது குறிப்பெச்சம்.

**(விளக்கம்)** கள்ளனேன் - தன்மை ஒருமைக் குறிப்புவினையா லணையும் பெயர். கள்ளத் தொண்டு - வஞ்சகமான பணி ; செய்தற்கு உரியதல்லாத வழியிற் செய்யப்படும் பணி. உடல் அந்தக்கரணங்களை உயிருடன் சேர்த்து வைத்தும் அக்கருவிகளின் வழியும் அருளின் வழியும் காட்டுமுதவியும் காணுமுதவியும் இடையறாது உயிர்க்கு செய்துவருகிற சிவபெருமானுக்கு உரியதாகிய மனம் வாக்குக் காயங்களாற் செய்யத் தகுந்த தொண்டை உயிர் அவ்வுண்மையை அறியாது வேறு வழியிற் செய்யப்படும் தொண்டை அடிகள் கள்ளத் தொண்டு என்றார். அடிகள் தாம் சமண் சமயத்தில் இருந்த காலத்தில் செய்த தொண்டை நினைந்து கூறுகிறார். தெள்ளியேன் - தன்மை ஒருமை குறிப்புவினையா லணையும் பெயர். தேடினேன் நாடிக் கண்டேன் - நாடுதல் தேடுதலின் பின்னும் காணுதல் தேடுதலின் பின்னும் நிகழ்கின்றன ஆதலின் தேடினேன் நாடி என்பது நாடித் தேடினேன் என மாறிவைத்துப் பொருள் கூறப்பட்டது. "(திருமாலயன்) நாடிக் காணமாட்டாத தழலாய நம்பனைத் தேடிக் கண்டுகொண்டேன்" என்று அடிகள் திருவாரூர்த் தேவாரம் 10-வது பாட்டிற் கூறியருளினமை காண்க. நாடுதல் - உள்ளத்தில் சிவனைக் கருதி நினைத்தல். தேடுதல் - ஆன்மா தன்கண் விளங்கும் ஆன்ம அறிவிற் சிவனைத் தேடுதல். காண்டல் - ஆன்மா தற்போதங் கெட்டு அருளோடு வேறற நின்று அவ்வருளால் சிவனைக் காணுதல். நாடுதல் ஆன்மதரிசனத்திலும் தேடுதல் ஆன்மசுத்தியிலும் காண்டல் சிவதரிசனத்திலும் சிவயோகத்திலும் நிகழும். நாடுதல் தேடுதல் காணுதல் மூன்றும் உள்ளத்தில் அருள்ஒளி விளங்கித் தெள்ளறிவு உண்டாயபின் நிகழ்தலால் தெள்ளியேனாகி நாடித்தேடினேன் கண்டேன் என்றார். நாடுதல் ஞானத்துச் சரியை நிலையையும் தேடுதல் ஞானத்துக் கிரியை நிலையையும் காண்டல் ஞானத்து யோகநிலையையும் குறிக்கின்றன. நாடித் தேடிக் காணுதல் சிவனை அருளால் அறியும் நெறி என்பது கூறப்பட்டது. உள்கிற்று எல்லாம் - அஃறிணை ஒன்றன்பால் படர்க்கைத் தெரிநிலை வினையா லணையும் பெயர். நினைத்த கருத்துக்களெல்லாம் ஒருமை பன்மை மயக்கம் ; பால் வழு அமைதி. உடனிருந்து அறிதி - இது சிவன் ஆன்மாவுக்குச் செய்து வருகிற காணும் உதவி ; காரைக்காலம்மையார் இதனை "அறிவாய் அறிகின்றான் தானே" என்று கூறி அருளினார். உள்ளத்தில் ஆன்ம அறிவோடு சென்றியைந்து அவ்வுள்ளத்தை விட்டு நீங்காதிருக்கிற சிவன், ஆன்மா தனது உள்ளத்திற் கருதுகிற பொருள்களை அறியாமலிருக்க முடியாது என்ற உண்மையைத் தாம் தெள்ளிய அறிவை அடைதற்கு முன் அறியாதிருந்ததற்கு வெட்கம் அடைந்ததாக அடிகள் கூறுகின்றார். நாணும் - உம் - அசை. சிரித்திட்டேன் - இடு - துணை - வினை - பகுதிப்பொருள் விகுதி. சிரித்தேன். முறுவலித்தல், அளவிற் சிரித்தல், பெருகச் சிரித்தல் என்னும் மூவகைச் சிரிப்புக்களில் இது பெருகச் சிரித்தல் ; அறியாமை காரணமாக வந்த வெட்கத்தின் மெய்ப்பாடு.

நிலையாய நின்னடியே நினைந்தே னினைதலுமே
தலைவா நின்னினையப் பணித்தாய்சல மொழிந்தேன்

சிலையார் மாளிகை சூழ்திரு மேற்றளி யுறையும்
மலையே யுன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. கூக

(உரை) தலைவா - எனது ஆண்டவனே ; நின் அடியே - நினது திருவடிகளையே ; நிலையாய் நினைந்தேன் - (எனது உள்ளம் மண் முதல் கலை இறுதியாகவுள்ள பிரகிருதி மாயை அசுத்த மாயா தத்துவங்களிலும் புவனங்களிலும் அடையத்தக்க விடயபோகப் பற்றுதலொழிந்து துவந் துவத்தன்மை கெட்டுத் தூய்மை அடைந்து நினது அருளொளியுடன் கூடி நிற்கும் நிலையில்) நினைப்பும் மறப்புமின்றி நான் நின்னையே எப்பொழுதும் ஒரு தன்மையதாய் நினைந்துகொண்டிருக்தேன் ; நினைதலும் அவ்வாறு நான் நின்னையே எப்பொழுதும் நினைந்துகொண்டிருக்கிற நிலையை அடைந்தபொழுது; நின் நினையப்பணித்தாய் - நான் நினைக்கின்றேன் என்ற தற்போதமும் எனக்கு இன்மையால் நீ எனது அறிவு வேட்கை செயல்களை எல்லாம் நினது வியாபக அறிவு வேட்கை செயல்களுக்குள் அடங்கச்செய்து என்னை உனது ஆளாக ஏற்றுப் பணி கொண்டருளினாய்' சலம் ஒழிந்தேன் - அதனால் நான் இருவினைத் துவந்துவங்களால் சிறிதும் தாக்கப்பட்டு விகாரம் அடையாது ஒரு தன்மைத்தாகிய அமைதி பெற்று எனது உள்ளத்தில் நின்னையே உணரும் பேரின்ப உணர்வைப் பெற்றேன் ; சிலையார் மாளிகை சூழ்திருமேற்றளி யுறையும் மலையே - (ஆதலால்) கற்களினுற் கட்டப்பட்ட வீடுகள் சூழ்ந்திருக்கிற திருமேற்றளி என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஏ அருள்மலையே ; உன்னை அல்லால் மகிழ்ந்தேத்தமாட்டேன் - உன்னையன்றி வேறொரு தெய்வத்தை நான் உள்ளம் உவந்து துதிக்கமாட்டேன் ; அடியார்களே நீங்களும் திருமேற்றளி உறைகின்ற சிவபெருமானுடைய திருவடிகளையே நினைந்து உய்மின் என்பது குறிப்பெச்சம்,

(விளக்கம்) தலைவா - தலைவா என்று முதலாவது அடிகள் சிவபெருமானை விளித்தது " உன்னை நான் பணிதல் என் கடன் நீ என்னைக் காத்தல் உன்கடன் " என்பது குறிப்பிடப்பட்டது - தலைவன் என்ற சொல் ஆண்டான் அடிமைத் தொடர்பைக் காட்டுகிறது. நின் அடியே-ஏ தேற்றம். நிலையாய் நினைந்தேன்-ஆன்மா துவந் துவங்களினின்று (Pairs of opposites) நீங்கியும் பொருட்பற்று உயிர்ப் பற்றுக்கள் நீங்கியும் தன் முனைப்புக் கெட்டு மல இருள் நீங்கியபொழுது சிவபெருமானே தனக்கு உண்மையில் நிலையான பற்றுவான் என உணர்ந்து அவனைப் பற்றும்பொழுது நினைப்பும் மறப்பு மற்ற சிவயோக நிலை உண்டாகிறது. அந்த நிலையை நினைந்து சுந்தரமூர்த்தி அடிகள் நின்னடியே நிலையாய் நினைந்தேன் என்றார். அடி என்பது திருவருளைக் குறிக்கிறது. "சட்டோ நினைக்க அமுதாம் கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை" என்று மாணிக்கவாசக அடிகள் கூறி அருளினமை காண்க. திருநாவுக்கரசு அடிகள் மேலே 41வது பாட்டில் "வஞ்சனே னினி நான் மறக்கிற்பனே" என்று கூறி யருளினர். நிலையாய் என்ற சொல்லில் மேலே 51வது பாட்டில் "புலன்களைப் போக நீக்கிப் புந்தியை யொருக்கவைத்து இனங்களைப் போகநீக்கி இரண்டையும் நீக்கி யொன்றாய் மலங்களை மாற்ற வல்லார்" என்ற இரண்டரை வரிகளிலுள்ள கருத்துக்களும் அடங்கி யிருக்கின்றன. பொறிகளைப் புலன்களிற் போகாது நீக்கியும் புந்தியையும் அதன் இனங்களையும் ஒடுக்கியும் ஆன்மா விடயபோகத்தில் அறவே செல்லாதிருந்தாலொழிய அதற்கு சிவனை நிலையாக நினைக்கும் நினைப்பு உண்டாகாது. நின்நினையப்பணித்தாய் - பணித்தல் அருள்செயல் இந்தச் சொற்றொடராற் குறிக்கப்பட்ட பொருள் மேலே 49-வது பாட்டில் "உணரப்படுவார்" என்ற சொல்லாற் குறிக்கப்பட்டிருத்தல் காண்க. சலம் ஒழிந்தேன் - மேலே 51-வது பாட்டில் மனத்திடைப் போகமாகிச் சினங்களை மாற்றவல்லார் என்ற தொடர்களாற் குறிக்கப்பட்ட பொருளும் 49-வது பாட்டில் உணரப்படுவாரோ

டொட்டி வாழ்நி என்ற சொற்ருெடராற் குறிக்கப்பட்ட பொருளும் இப்பாட்டில் "சலமொழிந்தேன்" என்று கூறியவாற்ருற் குறிக்கப்பட்டிருத்தல் காண்க. 51-வது பாட்டின் கீழ்க் கூறப்பட்ட குறிப்பு உரைகளை இதற்கும் கொள்க. சலம் ஒழிதலின் பயன் உள்ளத்தில் சிவபோக உணர்வு பெறுதல் ஆதலால் பேரின்ப உணர்வு பெற்றேன் என்று உரை செய்யப்பட்டது.

அஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாருமுனை நட்பாய்
வஞ்சப்படுத் தொருத்தி வாணுள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூ ராலங்காட் டெம்மடிகளே. கூஉ

**(உரை)** அஞ்சவருவாரும் - (எனது ஐம்பொறிகளும் அந்தக் கரணங்களும் தங்கள் இனங்களுடன் உலக போக விடயங்களிற் செல்லும் பற்று) முற்றிலும் கெடுதலால் எனது உள்ளத்தில் பேரொளியாய் விளங்கித் தோன்றுகிறவரும்; தொழுவிப்பாரும் - (அவ்வாறு பேரொளியாய் விளங்குகிற காரணத்தால் எனது அறிவு வேட்கை செயல்களைத் தமது அறிவு வேட்கைச் செயல்களின் வியாபகத்துள் அடங்கச் செய்து) தற்போதமின்றித் தம்மை வணங்கும்படி என்னைச் செய்கிறவரும்; நெஞ்சம் புகுந்து என்னை நினைவிப்பாரும் - அவ்வாறு நான் தற்போதம் கெட்டுத் தமது அருள் வியாபகத்தில் அடங்கி நிற்க எனது உள்ளத்தில் விளங்கி மேவிட்டு நின்று தம்மையே என்னை நிலையாக நினைக்கும்படி செய்கிறவரும்; முனை - முன் ஒருநாள்; ஒருத்தி - நீலி என்னும் ஒருமாயப் பெண்; நட்பாய வஞ்சப்படுத்து - (எழுபது வேளாளரை) நட்புச் செய்து (கள்ளுெடுகூட வந்த வணிகன் தனது கணவன் என்றும் அவனைத் தன்னுடன் கலந்திருக்கும்படி செய்தால்தான் அவனுக்கு வேறு ஒன்றுஞ் செய்வதில்லை என்றும் அவர்களிடம் உறுதி மொழி கூறி அதனை நம்பும்படி அவர்களை) வஞ்சித்து; வழுவிப் போய் வாழ்நாள் கொள்ளும் வகை கேட்டு - (அவ்வெழுபது வேளாளரும் அவளுக்காக அவ்வணிகனுடம் பிணைக்கொடுக்க அவன் உடன்பட்டு அவளோடு அன்றிரவு கலந்திருந்த பொழுது) பின் தான் செய்த உறுதி மொழியினின்றும் தவறி (அன்றிரவில்) அவனது உயிரைக் கொன்ற செய்தியைக் கேட்டு; அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகள் - அவர்கள் அஞ்சித் தாங்கள் செய்த வாய்மையைக் காக்கத் தீக்குழியில் விழுந்து இறந்த பெருந்தகைமைச் சிறப்பு வாய்ந்த பழையனூரைச் சேர்ந்த திருவாலங்காட்டில் திருக்கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானுவர்.

**(விளக்கம்)** இப்பாட்டு - திருஞானசம்பந்த அடிகள் காரைக்காலம்மையார் தலையாலே நடந்து சென்று வணங்கின திருவாலங்காட்டைக் காலினல் மிதிக்க அஞ்சி அவ்வூருக்கு அணிமையிலுள்ள ஒரூரில் இரவு தங்கியிருந்தபொழுது சிவபெருமான் அவரது கனவிலே தோன்றி "ஆலவனத்தமர்ந்தருளும் அப்பராகிய நம்மைப் பாடுதற்கு அயர்த்தனையோ" என்று கூற, விழித்தெழுந்து பாடிய தேவாரப் பதிகத்தின் முதலாவது பாட்டு. இந்நிகழ்ச்சிக்கு ஏற்ப "அஞ்ச வருவார்" என்பதற்கு நான் உறங்கும்பொழுது என்கனவிலே தோன்றுகிறவரும் என்றும் "தொழுவிப்பாரும்" என்பதற்குக் கனவிலே கூறிய ஆணையால் திருவாலங்காட்டுக் கோயிலுக்குப் போய்த் தொழும்படி செய்கிறவரும் என்றும் "நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும்" என்பதற்கு அவ்வாறு நான் தொழுததனுல் எனது உள்ளத்தில் அருளொளியாய் விளங்கித் தம்மை எப்பொழுதும் என்னை நினைக்கும்படி செய்கிறவரும் என்றும் பொருள் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு பொருள்கொள்ளுதல் புற வழிபாடுபற்றிப் பொருத்தமாயிருப்பினும் பதவுரையிற் கூறப்பட்ட பொருள் அக வழிபாடுபற்றிப் பொருத்தமுடைத்து.